# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

அநல ஹூ தை மீ

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!

—சுவாமி விவேகானந்தர்

தொகுதி 57 பகுதி 1

Acc-NO-38695





ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் சென்னை 600004 பாரதம்

# காந்தியடிகளின் பொன்மொழிகள்



பொன்மொழிகள்

★ சத்தியாக்கிரகத்தில் பொய் பித்தலாட்டங்களுக்கு இடமே இல்லை. இன்று உலகத்தில் பொய்யும் பித்தலாட்டமுமே நிறைந்திருக்கின்றன. இந்தமாதிரியான நிலைமையை நான் கையைக் கட்டிக்கொண்டு பார்த்துக் கொண்டிருக்க முடியாது. இன்று அப்படி இருந்தேனானால், உலகை நெருப்புச் சூழ்ந்துகொண்டிருக்கும் போது, கடவுள் எனக்குக் கொடுத்துள்ள செல்வத்தை நான் உபயோகிக்காததற்காக என்னைத் தண்டிப்பார்.

★ மனிதன் பெண்ணைத் தன் கருவியாகவே கருதி வந்திருக்கிறான். அவளும் அவனுக்குக் கருவியாகவே இருந்து பழகி, முடிவில் அப்படியிருப்பதையே சுலபமான காரியமாகவும், சந்தோஷகரமான காரியமாகவும் கருதிவிட்டாள். ஏனென்றால், நாம் குழியில் விழப்போகும் ஒருவனைப் பிடித்துக்கொண்டிருந்தால், குழியில் விழுவது நமக்கும் சிரமமில்லாத காரியமாகத்தானே இருக்கும்?

★ பெண்ணுரிமை என்ற விஷயத்தில் நான்பிடிவாதமாகவே இருக்கிறேன். புதல்விகளையும் புதல்வர்களையும் நான்சமஅந்தஸ்தோடுதான் நடத்துவேன்.

★ தைரியம் என்பது சரீரத்தின் இயல்பல்ல; அது ஆத்மாவின் இயல்பே. தைரியவானுக்கு ஆயுதங்கள் கடைசித் தேவைகளாகத்தான் இருக்கின்றன.





**எம். கே. கிருஷ்ண செட்டி**

"அசோகா பாக்டரி"

தபால் பெட்டி நெ. 3701

11/234, டாக்டர் நஞ்ஜப்பா ரோடு

**கோயமுத்தூர்-641018**

சுந்தர எண் 6620

7.2.77



வந்துவிட்டது! புதிய நூல்!
முதற் பதிப்பு! அழகான பதிப்பு!

# ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம்

முதல் பாகம்

பக்கம் – 667+XVI ஸைஸ் – க்ரௌன் 1/8

தமிழாக்கம் : சுவாமி தன்மயானந்தர்

ஸ்ரீ பரமஹம்ஸதேவருடைய திருவாக்கினின்றும் அவ்வப்பொழுது பொழிந்த அமுதமொழிகளை ஸ்ரீம– (ஸ்ரீ மஹேந்திரநாத குப்தர்) ஆர்வத்தோடு நினைந்து படம் பிடித்தாற்போன்று தொகுத்து **ஸ்ரீ ஸ்ரீ ராமக்ருஷ்ண கதாம்ருதம்** என்ற வங்காளிப் பெருநூலாக ஐந்து பகுதிகளாக வெளியிட்டார். அந்த நூலின் முதற் பாகம் இது. முதல் முறையாக நேரடியான தமிழாக்கத்தில் வெளிவருகிறது.

நூலின் முன்னுரையில் ஸ்ரீம– அவர்களின் வரலாற்றுச் சுருக்கம், பெரிய 18 அத்தியாயங்களில் பரமஹம்ஸர் தமது சீடர்களோடும் அடியார்களோடும் நிகழ்த்திய ஞான சம்பாஷணைகள், அநுபந்தம், அகராதி ஆகியவற்றோடு அமைந்தது.

நடமாடும் கோயிலாக மண்ணுலகில் வாழ்ந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பகவானின் உபதேசங்கள் அடங்கிய ஆன்மிகப் பேழைதான் **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம்.**

முழுப் பாகத்தின் விலை ரூ. 15–00

இதே இரு பகுதிகளாகவும் கிடைக்கும்— பகுதி ஒன்றுக்கு ரூ. 8-00



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை 600004

புதிய மூன்றாம் பதிப்பு அழகான பதிப்பு

# ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

(ஸ்ரீ துர்காஸப்தஶதீ)

உரை ஆசிரியர்: 'அண்ணா'

மூலம் நாகரத்திலும் தமிழிலும்-உரையுடன், கவசம், அர்க்கலம், கீலகம், ராத்ரீஸூக்தம், நவாக்ஷரீ, தேவீஸூக்தம், ரஹஸ்ய-த்ரயம் முதலியனவும் கூடியது. அநுபந்தத்தில் ஸப்தஶதீ யந்த்ர பூஜனம், நவராத்திரியில் வார்ஷிக சண்டீ விதானம், சண்டீஹோமம், துர்காஸூக்தம் முதலியவை அடங்கியது.

பக்கங்கள்: xii+392 விலை: ரூ. 8-00 ஸைஸ்: க்ரௌன் 1/8



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை 600004

புதிய பதிப்பு மூன்றாம் பதிப்பு

# தைத்திரீய-மந்த்ரகோசம்

(தமிழில்—ஸ்வரத்துடன்)

தொகுப்பாசிரியர் 'அண்ணா'

இந்தத் தொகுப்பில் தைத்திரீயோபநிஷத் (நான்கு வல்லிகளும்), ஸூர்ய நமஸ்காரம், நவக்ரஹ நமஸ்காரம், ஸ்ரீருத்ரம், சமகம், (புருஷ-நாராயண-ஸ்ரீ-பூ-நீளா-துர்க்கா-பாக்ய-ருக்வேதீய-தேவீ-ராத்ரீ-பவமான-மேதா-ஆயுஷ்ய-சாந்தி) ஸூக்தங்கள், ஆஹ்நிக மந்திரங்கள் அடங்கிய அழகான பதிப்பு.

பக்கங்கள்: iv+252 விலை: ரூ. 6-00 க்ரௌன் 1/8



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை-600004

83-2

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—57] அநல ஹு தை மீ [பகுதி 1

## பொருளடக்கம்




*With best compliments from*

THE MAKERS OF

JABAKUSUM HAIR OIL

C. K. SEN & CO. PRIVATE LTD.

**CALCUTTA - 700012 :: NEW DELHI - 110015**

# ஸ்ரீமத் பகவத் கீதை

**ஆருவது பதிப்பு அழகான பதிப்பு வெளிவந்துவிட்டது**
**பக்கம் - xiv+510 ஸைஸ் - க்ரௌன் 1/8**

**உரை ஆசிரியர் — 'அண்ணா'**

'ஸ்ரீ ராமகிருஷ்ண தீபம்' என்னும் உரையுடன் கூடியது
இந்நூலைக் கொண்டு கீதை முழுவதும் கற்க விரும்புவோர்க்கு உதவியாக

**மூலம் நாகரத்திலும் தமிழிலும் உள்ளது.**

சுலோகங்களுக்குப் பதவுரையும் விளக்கக் குறிப்புகளும் கொண்ட இந் நூலில்

அத்தியாய விஷயச் சுருக்கமும் அத்தியாயப் பெயர்க்காரணமும் தரப்பட்டுள்ளன. உபநிஷதங்கள், பாகவதம், பாரதம், திருக்குறள், தேவாரம், திருவாசகம், திவ்யப்பிரபந்தம், நாரதபக்தி ஸூத்திரம், கீதை வெண்பா, கீதார்த்த ஸங்க்ரஹம் முதலிய நூல்களிலிருந்தும், ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீ ரமண மகரிஷி ஆகியோர் உபதேசங்களிலிருந்தும் மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன.

அநுபந்தத்தில் ஸ்ரீமத் பகவத்கீதா மாஹாத்மியம், பகவத்கீதா ஜபவிதி, பகவத்கீதா ஹோமவிதி, பகவத்கீதா சுலோகங்களின் அகராதி, உரையின் அகராதி ஆகியவையும் இடம் பெறுகின்றன.

**சாதாரண பைண்டு ரூ. 8–00 காலிகோ பைண்டு ரூ. 9–50**



**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
**மயிலாப்பூர் :: சென்னை 600004**




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

— திருமூலர்

தொகுதி 57 அநல ஹு தை மீ பகுதி 1

## सुकुन्दमाला

## முகுந்தமாலை

ஸ்ரீ குலசேகராழ்வார் அருளிச்செய்தது

मुकुन्द मूर्ध्ना प्रणिपत्य याचे भवन्तमेकान्तमियन्तमर्थम् ।
अविस्मृतिस्त्वच्चरणारविन्दे भवे भवे मेऽस्तु भवत्प्रसादात् ॥

முகுந்த மூர்த்நா ப்ரணிபத்ய யாசே
பவந்த-மேகாந்த-மியந்தமர்த்தம் |
அவிஸ்ம்ருதிஸ்-த்வச்சரணாரவிந்தே
பவே பவே மேऽஸ்து பவத்-ப்ரஸாதாத் ||

**பதவுரை:**—(முகுந்த) முகுந்தா! (மூர்த்நா) தலையால் (ப்ரணிபத்ய) வணங்கி (பவந்தம்) உன்னை (இயந்தம்) இந்த (ஏகாந்தம்) ஒரே ஒரு (அர்த்தம்) பொருளை (யாசே) வேண்டிக் கேட்கிறேன். (பவே பவே) பிறவிதோறும் (பவத்-ப்ரஸாதாத்) உன்னுடைய திருவருளால் (த்வச்-சரணாரவிந்தே) உன் திருவடித் தாமரையில் (மே) எனக்கு (அவிஸ்ம்ருதி:) மறவாத ஞாபகம் (அஸ்து) இருக்கட்டும்.

தோய்த்த தண்தயிர் வெண்ணெய் பாலுடன்
உண்டலும் உடன்று ஆய்ச்சிகண்டு
ஆர்த்த தோள்உடை எம்பிரான் என்
அரங்கனுக்கு அடியார் களாய்
நாத் தழும்புஎழ நாரணா என்று
அழைத்து மெய்தழும்பத் தொழுது
ஏத்தி இன்புஉறும் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்தும் என்நெஞ்சமே.

[உடன்று - சினந்து. ஆர்த்த - ஆரவாரித்த, கொக்கரித்த.]

—ஸ்ரீ குலசேகரப்பெருமாள் திருமொழி.

श्री:

# श्रीरामकृष्णकर्णामृतम्

प्रथम: सर्ग:

# ஸ்ரீராமக்ருஷ்ணகர்ணாம்ருதம்

## ஸ்ரீ பாலபட்டர் அருளியது

உரையாசிரியர்: அண்ணா என். சுப்ரமணியம்

முதல் ஸர்க்கம்

## ஸ்ரீராமகிருஷ்ணரின் மகிமை

1

**கதாதர தர்ம தீபம்**

मोहान्धकार-हरणो विषयोन्मुखानां
स्नेहामृताशनरतो निजसेवकानाम् ।
निर्भासको निखिलयोग-महापथानां
देदीप्यते भुवि गदाधर-धर्मदीप: ॥

மோஹாந்தகார-ஹரணோ விஷயோந்முகாநாம்
ஸ்நேஹாம்ருதாஶநரதோ நிஜஸேவகாநாம் |
நிர்ப்பாஸகோ நிகிலயோக-மஹாபதாநாம்
தேதீப்யதே புவி கதாதர-தர்மதீப: |

**பதவுரை:**—(விஷய-உந்முகாநாம்) வெளிப் பொருள்களில் நாட்டம் உடையவர்களின் (மோஹ-அந்தகார-ஹரண:) மதிமயக்கமாகிற இருளை அகற்றுவதாகவும் (நிஜ-ஸேவகாநாம்) தனது அடியார்களுடைய (ஸ்நேஹ-அம்ருத-அஶந-ரத:) அன்பெனும் அமுதமாகிற நெய்யை உண்பதில் பிரியமுள்ளதாகவும் (நிகில-யோக-மஹாபதாநாம்) சிறப்பான யோக மார்க்கங்கள் அனைத்திற்கும் (நிர்ப்பாஸக:) வழிகாட்டும் வெளிச்சமாகவும் (கதாதர-தர்மதீப:) கதாதரர் என்னும் தர்மதீபம் (புவி) உலகில் (தேதீப்யதே) ஒளி மிகுந்து பிரகாசிக்கின்றது.

**கதாதரர்**—ஸ்ரீராமகிருஷ்ணருடைய இளமைப்பருவப் பெயர்.

**இந்நூலின் ஆசிரியர்:**—இந் நூலாசிரியராகிய ஸ்ரீபாலபட்டர் (சுப்ரமணிய நம்பூதிரிபாத் என்றும், ஒட்டூர் உண்ணி நம்பூதிரிபாத் என்றும் பெயர் பெற்றவர்) கேரளத்தில் ஒட்டப்பாலத்திற்கு அருகில் மாயன்னூர் என்னுமிடத்தில் வாழும் மலையாளக் கவி. நம்பூதிரிபாத் என்னும் சொல் சிறிய தெய்வ நம்பிக்கையாகிய திருவுடையவர் எனப் பொருள்படும். எழுநூறு ஆண்டுகளுக்கு முன் 328 சுலோகங்களில் 'ஸ்ரீகிருஷ்ணகர்ணாம்ருதம்' பாடிய லீலாசுகர் என்பவரும் நம்பூதிரிகுலத்தைச் சேர்ந்தவரே. அவரைப் பின்பற்றி இவர் 280 சுலோகங்களில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய பெருமைகளைப் பாடியுள்ளார்.

'உலகத் துன்பத்தால் தவிப்பவர்களுக்குப் புத்துயிர் அளிப்பதும், தீர்க்கதரிசிகளால் போற்றப்படுவதும், கேட்டமாத்திரத்தில் மங்களங்களைத் தருவதும், சாந்தி அளிப்பதுமாகிய,

உமது கதை என்னும் அமுதத்தை இந்த உலகில் எந்த மக்கள் விரிவுபடும்படி பேசுகின்றார்களோ அவர்கள் மிகவும் (கொடுத்து வைத்த) புண்ணியசாலிகள்' என்று ஸ்ரீமத் பாகவதத்தில் ராஸ க்ரீடையில் கோபிகைகள் கூறியதை இந்த நூலுக்கும் வாழ்த்துரையாகக் கூறலாம்.

தவ கதாம்ருதம் தப்தஜீவநம்
கவிபிரீடிதம் கல்மஷாபஹம் |
ஶ்ரவணமங்கலம் ஸ்ரீமதாததம்
புவி க்ருணந்தி தே பூரிதா ஜநா: ‖ (பாகவதம் 10.31.9.)

**2**

**புவன மங்கள தர்ம தெய்வம்**

निष्कृष्ट-तत्त्व-मखिलोपनिषद्गणानां
निष्किञ्चन-प्रिय-महेतु-कृपा-निकेतम् ।
निष्कल्मषं भवविनाशि गदाधराख्य-
मुत्कृष्यते भुवनमंगल-धर्मदैवम् ॥

நிஷ்க்ருஷ்ட-தத்வ-மகிலோபநிஷத்கணாநாம்
நிஷ்கிஞ்சந-ப்ரிய-மஹேது-க்ருபா-நிகேதம் |
நிஷ்கல்மஷம் பவ-விநாஶி கதாதராக்ய-
முத்க்ருஷ்யதே புவந-மங்கல-தர்மதைவம் ‖

**பதவுரை:—**(அகில-உபநிஷத்கணாநாம்) உபநிஷதச் சமூகம் அனைத்திற்கும் (நிஷ்க்ருஷ்ட) நிச்சயித்துக் கூறப்பட்ட (தத்வம்) தத்துவமும் (நிஷ்கிஞ்சநப்ரியம்) அனைத்தையும் துறந்தவர்க்குப் பிரியமானதும் (அஹேதுக-க்ருபா-நிகேதம்) காரணத்தை நாடாத கருணைக்கு உறைவிடமும் (நிஷ்கல்மஷம்) மாசற்றதும் (பவவிநாஶி) பிறவிப்பிணியைப் போக்குவதும் (கதாதராக்யம்) கதாதரன் எனப் பெயர் பெற்றதுமாகிய (புவந-மங்கல-தர்ம-தைவம்) உலகிற்கு மங்களத்தை அருளும் தர்மதெய்வம் (உத்க்ருஷ்யதே) சிறந்து விளங்குகின்றது.

**3**

**க்ஷுதிராமர் இல்லத்தில் உதித்த அதிசய ஜோதி**

पापाटवी-प्रदहने हुतभुक्-समानं
मोहान्धकार-दलने हरिदश्वकल्पम् ।
सन्ताप-नाशन-विधौ शरदिन्दु-तुल्यं
ज्योतिश्चकास्ति किमपि क्षुदिरामगेहे ॥

பாபாடவீ-ப்ரதஹநே ஹுதபுக்-ஸமாநம்
மோஹாந்தகார-தலநே ஹரிதஶ்வகல்பம் |
ஸந்தாப-நாஶந-விதௌ ஶரதிந்து-துல்யம்
ஜ்யோதிஶ்-சகாஸ்தி கிமபி க்ஷுதிராம-கேஹே ‖

**பதவுரை:—**(பாப-அடவீ) தீவினையாகிற காட்டை (ப்ரதஹநே) கொளுத்துவதில் (ஹுதபுக்) அக்கினிக்கு (ஸமாநம்) சமமானதும் (மோஹ-அந்தகார) மதிமயக்கமாகிற இருளை (தலநே) போக்குவதில் (ஹரிதஶ்வ) சூரியனுக்கு (கல்பம்) நிகரானதும் (ஸந்தாப-நாஶந-விதௌ) துன்பமாகிற வெப்பத்தைப் போக்குவதில் (ஶரத்-இந்து-துல்யம்) சரத்காலச் சந்திரனைப்

போன்றதும் ஆகிய (கிமபி) ஏதோ ஓர் அதிசயமான (ஜ்யோதி:) ஒளி (க்ஷுதிராம-கேஹே) க்ஷுதிராமர் எனப் பெயர் பெற்றவருடைய இல்லத்தில் (சகாஸ்தி) பிரகாசிக்கின்றது.

**க்ஷுதிராமர்** - ஸ்ரீராமகிருஷ்ணருடைய தந்தை (க்ஷுதிராம் சட்டோபாத்யாயர்)

**4**

**மூவுலகின் பாக்கிய மூர்த்தி**

योगीश्वरै-र्मनसि चिन्तित-पुण्यमूर्ति-
भक्तोत्तमैस्सरसगीत-पवित्रकीर्तिः ।
सन्दग्ध-सर्व-शरणागत-दुस्सहार्तिः
कश्चिद्विभाति भुवनत्रय-भाग्यमूर्तिः ॥

யோகீஶ்வரைர்-மநஸி சிந்தித-புண்யமூர்த்திர்
பக்தோத்தமைஸ்-ஸரஸகீத-பவித்ர-கீர்த்தி: ।
ஸந்தக்த-ஸர்வ-ஶரணாகத-துஸ்ஸஹார்த்தி:
கஶ்சித் விபாதி புவநத்ரய-பாக்யமூர்த்தி: ॥

**பதவுரை:**—(யோகீஶ்வரை:) யோகீசுவரர்களால் (மநஸி) மனத்தில் (சிந்தித) தியானிக்கப் பெற்ற (புண்ய-மூர்த்தி:) புண்ணியவடிவாகவும் (பக்தோத்தமை:) பக்தசிரேஷ்டர்களால் (ஸரஸ-கீத) அன்புகசியப் பாடப்பெற்ற (பவித்ர-கீர்த்தி:) புனிதமான புகழ் உடையதும் (ஸர்வ-ஶரணாகத) புகலடைந்த அனைவருடைய (ஸந்தக்த-துஸ்ஸஹார்த்தி:) சகிக்க முடியாத கஷ்டங்களையும் எரிப்பதும் ஆகிய (கஶ்சித் புவநத்ரய-பாக்யமூர்த்தி:) மூவுலகின் பாக்கியமே உருக் கொண்டாற் போன்ற ஏதோ ஒரு மூர்த்தி (விபாதி) பிரகாசிக்கின்றது.

**5**

**தேவலோகத்திலும் காண முடியாத ராஜஹம்ஸம்**

शुभ्रद्युतिः श्रुतिमनोहर-शुद्धगीतिः
स्वच्छन्द-साधुगति-रात्म-मृणाल-भोजी ।
कश्चिद् द्युलोक-विरलः कलराजहंसो
भक्तान्तरङ्ग-कमले विजरीहरीति ॥

ஶுப்ரத்யுதி: ஶ்ருதிமநோஹர-ஶுத்தகீதி:
ஸ்வச்சந்த-ஸாதுகதி-ராத்ம-ம்ருணால-போஜீ ।
கஶ்சித் த்யுலோக-விரல: கலராஜஹம்ஸோ
பக்தாந்தரங்க-கமலே விஜரீஹரீதி ॥

**பதவுரை:**—(ஶுப்ர-த்யுதி:) பரிசுத்த வெள்ளைப்பிரகாசமும் (ஶ்ருதி-மநோஹர) கேட்பவர் மனத்தைக் கவரும் (ஶுத்தகீதி:) பாவனமான பேச்சொலியும் (ஸ்வச்சந்த) சுதந்திரமான (ஸாது கதி:) சிறிய நடையும் (ஆத்ம-ம்ருணால-போஜீ) ஆத்மஞானமாகிற தாமரைக் கொடி உணவும் உடைய (கலராஜஹம்ஸ:) கலகலப்பான ராஜஹம்ஸம் (கஶ்சித்) ஒன்று (த்யுலோக-விரல:) தேவலோகத்திலும் காண முடியாதது (பக்த-அந்தரங்க-கமலே) அடியார்களின் உள்ளத் தாமரையில் (விஜரீஹரீதி) விளையாடுகிறது.

இங்கு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஒரு ராஜஹம்ஸத்திற்கு ஒப்பிடப்படுகிறார்.



ஓம்




## மெய்யுரை

கடவுள் அருவமாய் அனைத்திலும் இருக்கிறார் என்ற கருத்துத்தான் நீதி நியதிகளுக்கு அடிப்படையாக இருக்கிறது. கடவுளை உருவத்தில் வழிபடுவதில் உண்டாகும் அற்புதமான பக்தியையும், அந்தப் பக்தியானது காலத்தின் தன்மைக்கு ஏற்றவாறு மக்களுக்கு அளிக்கும் அதி ஆச்சரியமான சக்தியையும் நான் நன்றாக உணர்வேன். பலமே இப்பொழுது நமக்குத் தேவை. எல்லாக் குருட்டு நம்பிக்கைகளையும் மனத்தினின்று அகற்றி நாம் ரூபாதீதமான பரம்பொருளின் அம்சம் என்று நினைக்கும்போது அது எத்தகைய சக்தியை நமக்கு அளிக்கிறது! என்னை எதுவும் பாதிக்காது. இயற்கை விதிகளைப் பற்றி எனக்குக் கவலையில்லை.

Vivekananda

(சுவாமி விவேகானந்தர்)

## விளையும் பயிர் முளையிலே

சான்றோர்களின் வரலாறு இரண்டு விதமாக அமைவது உண்டு. ஒருசில நல்லோர், இளமையிலே கட்டுமீறிய வாழ்வு வாழ்ந்துவிட்டுப் பின்னர் ஏதோ ஒரு மகத்தான மாறுதல் ஏற்பட்டு, மகான்கள் ஆனவர்கள். வேறு சிலர், பிறவியிலிருந்தே அறநெறியில் ஈடுபட்டு நல்லொழுக்க மணம் நிறைந்தவர்களாகவே வளர்ந்தவர்கள். முன்சொல்லப்பட்டவர், நீண்டகாலம் இருளில் மூழ்கிக் கிடந்த அறையில் திடீரென்று வெளிச்சம் வந்து பாய்வதை நினைப்பூட்டுவர். பின்னால் சொல்லப்பட்டவர், விளையும் பயிர் முளையிலே என்ற உண்மைக்கு உதாரணபுருஷர் போன்றவர்.

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் சிறு பிராயத்திலும் இளமையிலுங்கூட, போற்றத்தக்க பெருமைகள் நிறைந்தவராக இருந்தார். அவர் முதிர்ச்சியுற்றபொழுது இந்த நற்குணங்கள் மேலும் அதிகமான காந்திபெற்றுச் சோபித்தன. மொட்டாக இருக்கும்பொழுதே மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து, பின்னர் மலராக விரிந்தபின் மாந்தருடைய அழகுணர்வைக் கொள்ளைகொள்ளும் புஷ்பம் போன்று பிரகாசித்தார் அவர். அவருடைய ஜீவியசரிதம் கவிதை மிகுந்த இதிகாசம் போன்றது. இதிகாச புருஷர்களின் பாலகாண்டத்திலேயே அவர்களுடைய பிற்கால மகிமையின் முன்னறிவிப்புகள் தெளிவாகத் தென்படுகின்றன. விவேகானந்தரின் ஜீவிய சம்பவங்கள் பலப்பலவாகும். அவருடைய நாற்பது ஆண்டுக்கும் குறைவான வாழ்வில் அவர் செய்து சாதித்த பெருங்காரியங்கள் ஒரு மாவீரருக்கே, பெரும் ஞானிக்கே, பேராற்றல் மிகுந்த மகாபுருஷருக்கே, தெய்விகப் புருஷருக்கே சாத்தியமானவை. அவற்றில் சிலவற்றை எடுத்துக்கூறி

விளக்கம் தருவது இந்தக் கட்டுரையின் நோக்க மாகும்.

விவேகானந்தரின் சம்பூரண மகிமையை அதன் முழுஅளவில் தெரிந்துகொண்டு இன்புற்றவர் அவருடைய குருதேவரான ஸ்ரீ ராம கிருஷ்ணரேயாவார். சாமானிய மக்களின் ஜீவன் விவேகானந்த மாகாத்மியத்தின் ஒரு சில பகுதிகளையே கிரகிப்பது கூடும். ஆனாலும் சின்னஞ்சிறு பாத்திரம் சிறிதளவு நீரையே கொள்ளக்கூடுமாயினும் அந்தச் சொற்ப நீர் அந்தச் சிறு பாத்திரத்தை நிறைத்துவிடுகிறது அல்லவா? எந்த விவேகானந்த விமரிசனமும் அதேபோன்று, சுருக்கமானதாயினும், உள்ளத்தில் நிறைவு தர வல்லது.

* * *

விவேகானந்தரைப் பெற்றெடுத்த பாக்கியவதி புவனேசுவரிதேவி. சிவபிரானை வேண்டி அவர் அந்த அற்புத பாலனைப் பெற்றார். காசியில் வீற்றிருக்கும் வீரேசுவர சிவபெருமானுக்கு அவர் அபிஷேகமும் அர்ச்சனையும் செய்யுமாறு காசியில் வசித்த உறவினரான ஓர் அம்மையார் மூலம் ஏற்பாடு செய்தார். தாமும் கல்கத்தாவில் வசித்தாலும் வாராணசி வீரேசுவரரைத் துதித்து வந்தார். ஒரு நாள் காட்சி ஒன்றைக் கனவில் கண்டார். தியானசமாதியில் மூழ்கியிருந்த பரமேசுவரன் சமாதி கலைந்து ஓர் ஆண் குழந்தை உருக் கொண்டார். அந்தக் குழந்தையே தம்முடைய செல்வனாக ஜனிக்கவிருப்பதைப் புவனேசுவரி அம்மையார் உணர்ந்தார். அவ்வாறே மகன் பிறந்ததும் வீரேசுவர் என்றே குழந்தைக்குத் திருநாமம் இட்டார். வீரேசுவர பாலகரே பின்னர் நரேந்திரநாதர் என்று அழைக்கப்பட்டு, பின்னர் விவேகானந்த சுவாமிகள் ஆனார்.

சிவகிருபையாக, வீரேசுவரரின் வரப்பிரசாதமாக, புவனத்தில் ஜனித்த மகான், மகாதேவரிடமிருந்தே பிற்காலத்தில் இச்சாமிருத்யு வரத்தைப் பெற்றார். அமரநாத்திற்கு யாத்திரை சென்ற விவேகானந்தருக்குச் சிவதரிசனம் கிடைத்ததுடன் சிவபிரானிடமிருந்தே இந்த இச்சாமிருத்யு வரப்பிரசாதமும் கிடைத்தது. தம்முடைய பூவுலகப் பணி முடிந்ததும் அவர் 1902, ஜூலை 4-ஆம் நாள் இரவில் தியானத்தில் லயித்திருந்து, பூதஉடலை உமிழ்ந்து, பரமபதம் மீண்டார். சிவத்தில் தோன்றிய விவேகானந்த வெள்ளம் சிவக்கடலிலேயே சங்கமமாகிவிட்டது. மலைகளுக்கு நடுவிலே அமைந்த மகாதேவ ஆலயம் ஒன்றிலே மரணம் தம்மை அண்டும் என்ற ஓர் உணர்ச்சி விவேகானந்தருக்குச் சிறு பிராயத்திலிருந்தே இருந்து வந்ததாம். இச்சாமிருத்யு வரம் அவருக்குக் கிடைத்த தலம் மலைகளுக்கு நடுவிலே அமைந்த அமரநாத் க்ஷேத்திரம் என்பது பொருத்தமே ஆயிற்று.

* * *

அஞ்சாநெஞ்சம் படைத்த வீர பாலராகத் திகழ்ந்தார் விவேகானந்தர். அச்சம் என்பதை அவர் அறியாதவர். ஒரு நாள் சிறியவரான நரேந்திரர் கல்கத்தா வீதியொன்றில் போய்க் கொண்டிருந்தார். சாலையில் திடீரென்று குழப்பமும் கூக்குரலும் எழுந்தன. குதிரைவண்டி ஒன்றில் ஓர் அம்மை நடுநடுங்கியவாறு உட்கார்ந்து கிடந்தாள். குதிரை ஏதோ காரணத்தால் வெறிகொண்டு வண்டியை நினைத்தபடியெல்லாம் இழுத்துச் சென்றது. வண்டிக்கும், வண்டியில் சிக்கியிருந்த அம்மாளுக்கும் என்ன விபத்து வேண்டுமாயினும் சம்பவிக்கலாம் என்று கண்ட மக்கள் கூக்குரலிட்டனர். ஆனால் எவருமே அந்த அம்மைக்கு உதவ முன்வரவில்லை. என்ன செய்வதென்றே எவருக்கும் தோன்றவும் இல்லை. இந்தச் சங்கட நிலையைக் கண்ட நரேந்திரர் ஓடவில்லை, பிரமித்து நிற்கவில்லை, வெகு தைரியத்துடன் முரட்டுக் குதிரையை நெருங்கிப் பிடித்து நிறுத்தினார். அம்மையும் பெருவிபத்திலிருந்து தெய்வாதீனமாகத் தப்பினாள். பாலனுடைய சாகசச் செயலைக் கண்ட மக்கள் வியந்து போற்றினர்.

பல ஆண்டுகளுக்குப் பின்னர் விவேகானந்தர் இங்கிலாந்தில் தங்கியிருந்த சமயம் இதே போன்ற வீர சாதனை ஒன்று நிகழ்ந்தது. வயல்களினூடே நடந்து போய்க்கொண்டிருந்தார் சுவாமிஜி. ஒரு வெள்ளைக்காரக் கனவானும் ஒரு சீமாட்டியும் (குமாரி முல்லர்) வெறிகொண்ட காளையொன்றால் துரத்தப்பட்டுத் திண்டாடினர். கனவான் ஒரே ஓட்டமாக ஓடிக் காலைக்குத் தப்பி மறுபுறம் சென்று பிழைத்துக்கொண்டார். குமாரி முல்லர் தம்மால் முடிந்தமட்டும் ஓடிஓடிப் பார்த்து, மேலும் ஓடுவதற்குச் சக்தியில்லாமல் தரையிலே சரிந்து விழுந்துவிட்டார். சுவாமிஜி இதைப் பார்த்தார். சீமாட்டியும் தப்பியோடுமாறு செய்வதற்கு நேரமோ வழியோ இல்லை. உடனே தரையில் கிடந்த

சீமாட்டிக்கு முன்னுல் போய்க் கைகளைக் கட்டிக் கொண்டு காளை பாய்ந்து வரும் பாதையில் காளையை நோக்கியவாறு விவேகானந்தர் திட மாக நின்ருர். 'இதுதான் முடிவு' என்றுகூட அவருக்குத் தெற்றெனத் தோன்றிற்று. ஆனுல் உள்ளத்தில் அவர் கணக்கு ஒன்று போட்ட வாறு நின்ருர். 'இந்த வெறிகொண்ட மூர்க்கக் காளை என்னைத் தூக்கி எறிந்தால் என் கன முள்ள உடல் எவ்வளவு தூரம் போய் விழும்?' என்று கணக்குப் போட்டவாறு நின்ருர்! ஆனுல் தெய்வசித்தம் வேருக இருந்தது. புருஷரிஷப மான சுவாமிகளின் கம்பீர சொரூபத்தின் முன்பு, முன்னுல் துள்ளி வந்த முரட்டுக் காளை திடீரென்று நின்றது; தலையை நிமிர்த்திப் பார்த்துத் திரும்பி ஓடியேவிட்டது. குமாரி முல்லர் பிழைத்தாள். சுவாமிகளுக்கும் கேடு ஒன்றும் நேரவில்லை. அச்சம் தவிர்த்து ஆண்மை யுடன் நின்ற அவருடைய காட்சி, காளையை யும் நிம்மதியுறச் செய்தது.

* * *

விவேகானந்தர் அசாதாரணமான திருஷ்டி வன்மை படைத்தவர். புற இயற்கையின் மாட்சிமையிலே அந்தராத்மாவின் லாவணியத் தைக் கண்டு ரசிக்கும் ஆற்றல் மிக்கவர். ஞானக் கண் கொண்டவருக்கே, யோகப் பார்வை உடையவருக்கே, இது சாத்தியமாகும். பிரபஞ் சத்தில் பரம்பொருளின் பெருமை ஊடுருவி நிறைந்து கிடப்பதை உணருகிற சக்தி ஆத்ம நிறைவு பெற்ற மகான்களுக்கே உண்டு. நரேந்திரநாதர் இளைஞராக இருந்த காலத் திலே, பள்ளி மாணவராக இருந்த வயதிலே, அவருடைய குடும்பத்தினர் கல்கத்தாவிலிருந்து ராய்பூர் என்ற ஊருக்கு நீண்ட பிரயாணம் போகவேண்டி வந்தது. மாட்டு வண்டியிலே அடர்ந்த காட்டினூடே பிரயாணத்தின் ஒரு பகுதி அமைந்தது. அந்தப் பிரதேசம் இயற்கை வனப்பு மிகுந்த இடம். இறைவி காடுகளின் மீது அழகைச் சொரிந்திருந்தாள். விந்திய மலைப் பள்ளத்தாக்குகளின் வழியே வண்டி போய்க்கொண்டிருந்தது. வானமளாவிய மலை வரிசைகள் இருபுறமும் ஓங்கியிருந்தன. பசுமை யான பலவித விருட்சங்களும், வண்ணமலர்கள் நிறைந்த செடிகொடிகளும், பறவைகளின் குரல்களும் நரேந்திரநாதருக்குச் சொல் லொணுத மகிழ்ச்சியைத் தந்தன. உயரப் பார்த்த நரேந்திரநாதருக்கு ஒரு பிரம் மாண்டமான தேன்கூடு தென்பட்டது. அது வெகு நாளைய கூடு என்பது தெற்றென விளங்கியது. இலட்சக்கணக்கான தேனீக்கள் அதை மொய்த்தவாறு இருந்தன. அந்தத் தேனீக்கள் செய்த பெருந்தொண்டும், அவை கூடி அமைத்துக் காத்துவந்த தேன்கூடு நிர்வாக மும், மாந்தர் ஆக்கியமைக்கும் அரசையுங்கூடக் கட்டுப்பாட்டிலும் ஒழுங்கு விதியிலும் ஒத் துழைப்பிலும் செல்வவளத்திலும் மிக மிக விஞ்சி நிற்கும். அந்தத் தேன்கூட்டுச் சமுதாயத் தின் சிறப்பு நரேந்திரருடைய இளநெஞ்சை நிறைத்துச் சிந்தனையில் ஆழ்த்தியது. பகவத் சிருஷ்டியின் விசித்திரமும் காம்பீர்யமும் பண் பாடும் அவரை மெய்ம்மறக்கவே செய்து விட்டன. புற உணர்வு மங்கி மறைந்து அவர் அகவுலகில் ஆழ்ந்துகிடந்தார். வண்டி பல மைல் தூரம் கடந்த பின்னரே அவருக்குத் தம் சுய உணர்வு மீண்டது.

'வானத்தில் வானவில் ஒன்றைக் கண்டால்
என் உள்ளம் துள்ளி எழுகிறது!'

என்று மேனுட்டுக் கவி வார்ட்ஸ்வொர்த் பாடி ஞர். ஆனுல் பகவத்சொரூபம் பிரகிருதியில் துலங்கும் காட்சி ஞானியரின் உள்ளத்தை உட் புகச் செய்வது நம் நாட்டு முனிவருடைய அநுபவம்.

தேன்கூடு அளித்த பேருணர்வு நிகழ்ச்சி நடந்து பல ஆண்டுகளுக்குப் பின்னர், விவே கானந்த சுவாமிகள் ஒருசமயம் அட்லாண்டிக் பெருங்கடலின் மீது கப்பல் பிரயாணம் சென்று கொண்டிருந்தார். பிரயாணம் பத்து நாள் நீடித்தது. கீதாபாராயணம், கீதா விமரிசனம், கவிபாடுதல், கீதங்களை மொழிபெயர்த்தல், வேதகானம்—இவற்றில் அவருக்குக் காலம் ஆனந்தமாகக் கழிந்து வந்தது. நீலத்திரைக் கடல் கொந்தளிப்பின்றி அமைதி நிறைந்து கண்ணுக்கெட்டிய தூரம் பரவி விரிந்திருந்தது. இரவில் வானத்தில் நிலவு ஒளிவீசி, சௌந்தரி யத்தைப் பொழிந்தது. ஒரு நாள் சுவாமிஜி கப்பல்தட்டின் மீது உலவிக்கொண்டே நிலவின் லாவணியத்தைத் தம்முடைய ரூபலாவணி யத்தால் பன்மடங்கு பெருக்கினுர். இயற்கை யின் அழகுப் பெருக்கில் லயித்தவராக, ''ஆகா! இந்த மாயை அனைத்துமே இவ்வளவு அழ குடன் சோபிக்கிறதே! அப்படியானுல் இந்த மாயையின் பின்புள்ள சத்பொருளின் அதியாச்

சரியமான அழகை எண்ணிப் பார்ப்போமாக!'' என்று சொல்லிப் பரவசப்பட்டார்.

மாயையின் மாட்சியில் இன்புறுவது மாந்தர் போக்கு. மாயாதீதமான பரம்பொருளின் தியானத்தில் ஊறியிருப்பது மகாயோகிகளின் போக்கு.

* * *

விவேகானந்த சுவாமிகளிடம் தலையெடுத்து நின்ற சுபாவம் அவருடைய விவேகமே ஆகும். இந்த விவேகம் அவரிடம் சிறு பிராயத்திலேயே முற்றியிருந்தது. மூட நம்பிக்கை அவரிடம் எந்நாளுமே இருந்ததில்லை. சிறுபாலராக இருந்தபொழுது அவர் ஒரு வீட்டின் தோட்டத்தில் ஓங்கி வளர்ந்திருந்த மரமொன்றில் ஏறி விளையாடுவார். கிளையொன்றில் தலை கிழாகத் தொங்கியவாறு அங்குமிங்கும் ஆடிக் குட்டிக்கரணம் அடித்துக் கீழே குதிப்பார். அந்த இல்லத்தைச் சேர்ந்த கிழவரொருவருக்கு இந்தக் குறும்புக்காரப் பையனுடைய விளையாட்டுக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அவர் பையனைப் பயமுறுத்தி முடுக்கியோட்டிவிட எண்ணி, ''நரேன்! அந்த மரத்தில் ஒரு பிரம்மதைத்யப் பேய் வாசம் செய்கிறது. அந்த வெள்ளைநிறப் பிசாசு அந்த மரத்தில் ஏறுகிறவர்களுடைய கழுத்தை முறித்துப் போட்டுவிடும். ஜாக்கிரதை!'' என்று சொல்லி வைத்தார். கிழவரின் கூற்றை மிக நல்ல பையன் போலக் கேட்டுக்கொண்ட நரேன், அவர் அப்புறம் சென்றவுடனேயே மரமேற ஆரம்பித்தார். கூடஇருந்த ஒரு நண்பன் தடுத்தான். ''டேய் நரேன்! கழுத்தை முறித்துக் கொள்ளுவாய். பேயிடம் சிக்கிக்கொள்வாய்! கிழவர் கூறியதைக் கேட்கவில்லையா நீ?'' என்றான். நரேன் சிரித்தார். ''நண்பா! என்ன கழுதைப் புத்தி இது! இந்தத் தாத்தாவின் பேய்க் கதை மட்டும் நிஜமாகுமானால் என் கழுத்து இதற்கு முன்னதாகவே முறிந்திருக்க வேண்டுமே!'' என்று கூறித் தங்குதடையின்றி மரமேறித் தொங்கி ஆடினார்!

இந்தச் சிறுபாலருடைய அறிவுரையே, பிற்காலத்தில் சுவாமி விவேகானந்தருடைய வாக்கினின்றும் பெரிய சபையில் கூடியிருந்த மாந்தருக்குப் போதனையாக வெளிப் போந்தது. ''புத்தகத்தில் உள்ளது என்ற காரணத்தால் ஒரு விஷயத்தை நம்பிவிடாதீர்கள்! இன்னொருவர் அவ்வாறு சொன்னார் என்பதற்காகவும் ஒரு விஷயத்தில் விசுவாசம் கொண்டுவிடாதீர்கள்! நீங்களாகவே விசாரித்து ஆராய்ந்து உண்மையைக் கண்டு தெளியுங்கள்! அதுவே சாட்சாத்காரம்!'' என்று அவர் வீரமொழி முழங்கினார்.

* * *

புத்ததேவரிடம் விவேகானந்த சுவாமிகளுக்கு நிறையப் பக்திவிசுவாசம் இருந்தது. பள்ளிப் பருவத்தில் தமக்குக் கிடைத்த அருட்காட்சி ஒன்றைப்பற்றி, சுவாமிஜி சீடரொருவருக்குப் பிற்காலத்தில் இவ்வாறு உரைத்தார்: ''பள்ளிமாணவனாக இருந்தபொழுது ஓரிரவு நான் அறையின் கதவுகளை மூடிக்கொண்டு தியானம் செய்துகொண்டிருந்தேன். என் மனம் ஓரளவு நன்றாகவே ஏகாக்கிரதை எய்தியிருந்தது. நான் எவ்வளவு நேரம் இவ்வாறு தியானம் செய்தேன் என்று என்னால் கூற இயலாது. தியானம் முடிந்ததும் நான் ஆசனத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. அந்த அறையின் தெற்குப் புறச் சுவரிலிருந்து ஒரு சோதியுருவம் வெளி வந்து என்முன் நின்றது. அதன் முகத்தில் ஆச்சரியமான பிரகாசம் திகழ்ந்தது. ஆனாலும் அதனிடம் உணர்ச்சிவேகம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. அந்த உருவம் ஒரு சந்நியாசியினுடைய பரம சாந்தமான சொரூபம். தலையை மழித்துக்கொண்டு, தண்டமும் கமண்டலமும் தாங்கிய கரத்துடன் தோன்றிற்று அந்த உருவம். கொஞ்ச நேரம் அந்த மகான் என்னை உற்று நோக்கினார். என்னிடம் ஏதோ சொல்ல இருந்தார் போலத் தோன்றினார். நானும் வாய்பேசாது வியப்புற்று அவரை உற்று நோக்கினேன். பின்பு ஒரு வகையான பீதி என்னைப் பற்றிக்கொண்டது. நான் கதவைத் திறந்துகொண்டு அறையை விட்டு வெளியே விரைந்தேன். ஆனால் அவ்வாறு வெளியே ஓடுவது புத்திசாலித்தனமாகாது என்று அப்புறம் எனக்குப் பட்டது. அவர் ஒருவேளை எனக்கு ஏதாவது சொல்லலாம் என்றும் பட்டது. அதன்பிறகு நான் அந்தச் சொரூபத்தை மறுபடியும் சந்திக்கவேயில்லை. பல தடவை, அடிக்கடி, அந்தச் சொரூபியை நான் மீண்டும் சந்தித்தால் நான் இனி அவரைக் கண்டு அஞ்சாது அவருடன் பேச முற்படுவேன் என்று எண்ணியதுண்டு. ஆனால் நான் அதன்பின் அவரைச் சந்திக்கவே இல்லை.

இதைப்பற்றிப் பிற்காலத்தில் நான் சிந்தித்துப் பார்த்துள்ளேன். ஆனால் இந்த நிகழ்ச்சிக்கான விளக்கத்திற்கு வழி ஒன்றும் எனக்குக் கிட்ட வில்லை. இப்பொழுது நான் நினைக்கிறேன்— நான் அன்று கண்டது பகவான் புத்தரையே என்று.''

ஒரு சமயம் நரேந்திரரும் இரண்டு சகோதரச் சீடருமாகப் புத்தகயைக்கு யாத்திரை சென்ற னர். ஒரு நாள் மாலைப்பொழுதில் எங்கும் அமைதி நிறைந்திருந்த சூழ்நிலையில் போதி மரத்தடியில் அம் மூவரும் தியானத்தில் அமர்ந் தனர். நரேந்திரர் தியானக் கடலில் மூழ்கிக் கிடந்தார். திடீரென்று அவர் கண்ணீர் சொரிந் தார். பேருணர்வு வசப்பட்டவராகத் தோன்றி னார். தம்மை அடுத்து உட்கார்ந்திருந்த தாரக் நாத் என்ற சகோதரச் சீடரை (சிவானந்த சுவாமிகளை)க் கரத்தால் அணைத்துக் கட்டினார்; அவருடைய அணைப்பில் மென்மை மிகுந்திருந் தது. தாரக் திடுக்கிட்டுப் போனவராக இவ் வாறு அன்பணைப்புச் செய்ததற்குக் காரணத் தைப் பின்னர் வினவினார். அதற்கு நரேந்திரர், ''நான் தியானம் செய்தபொழுது, புத்தரு டைய பேரியல்பின் உயர்வும், அவரது ஒப் பிலாத தயையும், அவருடைய போதனைகள் பொழிகிற ஜீவகாருண்யமும், பௌத்த மதத் தின் அருட்சக்தியால் திசை திருப்பப்பட்ட பாரதத்தின் பிற்கால வரலாறும் — இவை யாவும் என் அகக்கண் முன் படம் படமாக ஒளிர்விட்டுப் பிரகாசித்தன. இந்த அநுபவம் என் உணர்ச்சிகளைக் கிளப்பிவிட்டது. நான் உணர்ச்சி வசப்பட்டுப் போனேன்'' என்று கூறினார்.

விவேகானந்தருடைய தாய்ச் சமயம் பௌத்த மதம் என்று தவறாக எண்ணி, அவரை ஒரு பௌத்தர் என்று குறிப்பிட்ட ஒருவரிடம் சுவாமிகள், ''ஆகா! என்னை ஒரு பௌத்தர் என்றா குறிப்பிட்டீர்கள்? அல்ல, நான் புத்தர்பெருமானுடைய தாஸர்களுடைய தாஸர்களுக்குத் தாஸனன்றோ ஆவேன்!'' என்று இயம்பினார்.

* * *

அவதார புருஷர் ஒருவருடைய லோக கைங்கரியம் செயற்படுவதற்கு அவருடைய அம்சமேயான இன்னொரு மகாபுருஷர் அவ ருடன் தோன்றுவது சிருஷ்டிதர்மம் ஆகும். இராமபிரானை அடைந்து அருஞ்செயல்கள் பல செய்தார் ஆஞ்சநேயர். கிருஷ்ணனாகிய நாராயணனுக்கு நரனாக வந்தவன் அர்ஜுனன். புத்தருக்கு ஆனந்தர் அவ்வாறே துணைவராக வாய்த்தார். ஏசு கிறிஸ்துவுக்கு இம் முறையில் நெருங்கியிருந்தவர் பீடர் என்பவர். கௌராங்க தேவருக்கு நித்தியானந்தர் இவ்வாறே உத வினார். ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் இவ்வாறே ஆனவர் விவேகானந்தர்.

ஸப்தரிஷி மண்டலத்தைச் சார்ந்த மகரிஷி ஒருவரே நரேந்திரராகப் பூமியில் ஜனித்தார் என்பது ஸ்ரீராமகிருஷ்ணர் கண்ட திவ்யக் காட்சி. மேலும் தம்முடைய அன்பழைப்புக்கு இணங்கவே அவர் அவ்வாறு நரவடிவம் கொண் டார் என்பதும் பரமஹம்ஸர் பெற்ற திவ்ய அநுபவமாகும்.

வாராணசியாகிய சிவபுரியினின்று, கல்கத்தா வான காளிகட்டத்தை நோக்கிப் பேரொளி வீச்சு ஒன்று வானத்தினூடே மின்னி வந்த அற்புதக் காட்சியை ஒரு நாள் ஸ்ரீராமகிருஷ் ணர் கண்டார். ஆனந்தம் பொங்க அவர், ''என் பிரார்த்தனை பலித்துவிட்டது. எனக் கான தூதபுருஷன் என்றோ ஒரு நாள் என்னை வந்தடைந்தே தீருவான்'' என்று வியந்து உரைத்துக்கொண்டார். அவ்வாறு வந்தவரே விவேகானந்தரான புண்ணியபுருஷர்.



## தேவி வணக்கம்

தேவி! சாஸ்திரங்கள் அனைத்தின் ஸாரத்தை உணரும் புத்தி வடிவினள் நீ. கடத்தற்கு அரிய பிறவிக்கடலைக் கடத்துவிக்கும் பற்றின்மை என்னும் படகாகிய துர்க்காதேவி நீ. விஷ்ணு வின் இருதயத்தைத் தனியிடமாகக் கொண்டு விளங்கும் ஸ்ரீதேவி நீ. சந்திரமௌலி (சிவன்) யிடம் பிரியாது உறையும் கௌரியும் நீயே.

**தேவீமாஹாத்மியம்-4-11.**



# இருள் இருக்கும் இடம்

வாகீசகலாநிதி ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன்

தாய்க்குக் குழந்தையைக் கண்ணாரக் கண்டு கண்டு மகிழ்வதில் ஒரு திருப்தி. தன் மைந்தனின் ஒவ்வோர் அங்கத்தையும் கண்டு கண்டு மனம் குளிர்வாள். அவளுக்கு வாக்கு வன்மை இருந்தால் பிற பெண்களோடு தன் குழந்தையின் அழகையும் இயல்பையும் வருணித்து வருணித்துப் பேசுவாள். இது தாய்மையின் இயல்பு.

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் ஈடுபட்டு அன்பு செய்வதில் பலபல வகையான நிலையிலிருந்து மகிழ்கிறவர். தன் குழந்தைக்கு ஏதேனும் தீங்கு வரப்போகிறதே என்று அஞ்சும் தாயைப் போலச் சில சமயம் பேசுவார். ''இப்படியெல்லாம் செய்யக்கூடாது அப்பா'' என்று அறிவுரை சொல்வது போலச் சொல்வார். இவை தாய்நிலையிலிருந்து பேசுபவை.

''எனக்கு இரங்கமாட்டாயா?'' என்று கெஞ்சுவார். ''உன்னுடைய அருளை உலகத்தார் அறியவில்லையே!'' என்று அங்கலாய்ப்பார். ''உன்னுடைய பெருமைக்கு ஈடு உண்டா?'' என்று பெருமைப்படுவார். ''நீ என் துன்பத்தைப் போக்காவிட்டாலும் நான் உன்னை மறக்க மாட்டேன்'' என்று கூறுவார். இவ்வாறு கூறும் இடங்களில் எல்லாம் அவருடைய பக்திபரவசம் மீதூர்ந்து நிற்கும்.

இப்போது தாய் தன் குழந்தையின் எழிலை அநுபவிக்கும் பாங்கில் அவர் பேசுகிறார். அம்மையாருக்கு இறைவனுடைய நீலகண்டத்தில் ஈடுபாடு அதிகம். வெவ்வேறு வகையில் அதன் பெருமையை எடுத்துரைப்பார். அதனால் விளைந்த நன்மையைச் சொல்வார். அதற்கு உவமை கூறிச் சிறப்பிப்பார். இப்போது சொல்லப்போகும் பாட்டில் நீலகண்டத்தை நினைந்து ஒரு கற்பனை செய்கிறார்.

அவனுடைய நீலமணி போன்ற திருக்கழுத்து விடத்தை உள்ளடக்கியிருக்கிறது. அந்த மறுவே நீலமணி போல் தோற்றுகிறது. இருள் செறிந்தது போலவும் சில சமயங்களில் நல்ல கறுப்பாகத் தோன்றும். ''கறை மிடறு அணியலும் அணிந்தன்று'' (புறநானூறு) என்று அதைக் கறுப்பான கறை என்று புலவர்கள் கூறுவார்கள்.

ஒருகால் இருள் செறிந்து வந்து அங்கே கட்டிதட்டி நிற்கிறதோ! ஏன் அங்கே வந்து இருக்க வேண்டும்? இறைவன் திருமேனி ஒளியையுடையது. அவன் தலையில் இருக்கும் மதி ஒளியை வீசுகிறது. சந்திரனுடைய நிலாவில் இருள் நீங்கும்.

இறைவன் அரவையே அணிகலனாகப் பூண்டிருக்கிறான். படம் எடுக்கும் நாகப்பாம்புகள் அவை. அவற்றின் கழுத்து அழகாக இருக்கும். வாயோ ஆழமான வாய். அத்தகைய அரவை அவன் முடியின்மேல் கட்டியிருக்கிறான். அரவுகளை அணிந்ததோடு கூட நீலமணியையும் அணிந்திருக்கிறானோ? கழுத்தில் நஞ்சு அப்படித் தோன்றுகிறது. ஆனால் ஒளிவீசும் சந்திரனைக் கண்டால் வேறு ஒரு கற்பனை தோன்றுகிறது.

அவனுடைய திருமேனி சுடர்வீசுகிறது. திருக்கழுத்தும் சுடர்வீசும் கோலம் உடையது. ஆனால் அங்கேதான் இருட்டைப் போல இந்தக் கறுப்பு இருக்கிறது.

அம்மையார் இறைவன் தலைமேல் உள்ள வெண்மதியைப் பார்க்கிறார். இறைவனுடைய திருமுடியாகிய உயர்ந்த இடத்தில் இருப்பதால் அதற்கு அச்சமே இல்லை. நன்றாக ஒளி விடுகிறது. 'இப்போதே இது இப்படி இருக்கிறதே! இது வளர்ந்துவிட்டால் இன்னும் எவ்வளவு ஒளிவிடும்!' என்று சுற்றிச் சூழ உள்ள இருள் எண்ணிப் பார்க்கிறதாம். 'இப்பொழுதே இதன் ஒளியால் நாம் மெலிந்து வருகிறோம். இனிச் சில காலம் போனால் இது வளர்ந்து தன் ஒளியினால் நம்மை அடியோடு அழித்துவிடும்' என்று அஞ்சுகிறது. என்ன செய்வது? எங்கே பாதுகாப்புத் தேடுகிறது?

நஞ்சுடைய நாகத்துக்கும் புகலிடம் தந்து அதை அணிகலனாகப் பூண்டிருக்கிறான் சிவபெருமான் என்பதை அது பார்க்கிறது. பட

மெடுக்கும் பாம்பு என்ருல் படையும் நடுங்கும். அதை இறைவன் அணிகலனுக ஏற்றிருக்கிருன். ‘அவன் அணிந்த வெண்மதியினுல் நமக்குத் தீங்கு வருவதற்கு முன்னம் அவனேயே புக லடைவோம்’ என்று அந்த இருள் எண்ணிய தாம். ‘இந்த இடந்தான் நமக்கு ஏற்றது’ என்று அப் பெருமான் கோலமிடற்றையே அடைந்து செறிவுடையதாகி, அங்கே இடம் கொண்டுவிட்டதாம். அவ்வாறு இருள் வந்து தங்கியதைப் போல இருக்கிறதாம், ஐய னுடைய மணிமிடற்றின் உள்ள மறு. இப்படி ஒரு கற்பனே செய்து மகிழ்கிருர் காரைக்கால் அம்மையார்.

**அடும்கண்டாய் வெண்மதிஎன்று**
**அஞ்சி இருள்போந்து**
**இடம்கொண்டு இருக்கின்றது**
**ஒக்கும்—படங்கொள்**
**அணிமிடற்ற பேழ்வாய்**
**அரவுஅசைத்தான் கோல**
**மணிமிடற்றின் உள்ள மறு.**

[படத்தைக் கொண்டனவும், அழகிய கழுத்தையுடையனவும், ஆழமான வாயை உடையனவுமாகிய நாகப்பாம்புகளே அணிகல னுகக் கட்டியவனுடைய அழகையுடைய நீல மணி போன்ற கழுத்தில் உள்ள நஞ்சின் கறுப்பான அடையாளமானது, ‘இந்த வெண் மதி நம்மை அழித்துவிடும்’ என்று பயந்து இருளானது இங்கே வந்து இந்த இடத்தைப் பற்றிக்கொண்டு இங்கேயே தங்கியிருக்கிறதைப் போல இருக்கும்.

மறு ஒக்கும் என்று கூட்டுக. அடும் - அழித்து விடும். கண்டாய்: அசை. பேழ்வாய் - ஆழமான வாய். அசைத்தான்-கட்டியவன். மிடற்றின் உள்ள மணி போன்ற மறு.]

அம்மையார் இறைவனே நெருங்கிக் கண்டு அவன் எழில்நலத்தை அநுபவிக்கும் பாங்கில் அமைந்தது இந்தப் பாட்டு.

இது **அற்புதத் திருவந்தாதியில்** 35-ஆம் பாடல்.



## ராஜாஜியின் கருத்து

ஹிந்துத்வத்தையும் பாரதத்தையும் காப்பாற்றியவர் ஸ்வாமி விவே கானந்தர். அவர் தோன்றியிராவிட்டால் நாம் நமது மதத்தைப் பறிகொடுத் திருப்போம்; சுதந்திரம் அடைந்திருக்கமாட்டோம். எனவே, அனேத்துக்கு மாக ஸ்வாமி விவேகானந்தருக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். அவரிட மிருந்து பெற்ற பொக்கிஷங்களேப் பத்திரமாக வைக்க, அவரது நம்பிக்கையும் அவரது துணிச்சலும் அவரது ஞானமும் நமக்கு உத்வேகமூட்டட்டும்!

**—சி. ராஜகோபாலாச்சாரி**

தமிழாக்கம்: மகாதேவன்



# ஆடி வரும் தேனே!

திரு ர. வேங்கடரத்தினம்

பாரதியாரின் கண்ணம்மா ஆடியசைந் தோடி வரும் ஒரு குழந்தையல்ல. அவர் கண் ணுக்குக் குழந்தை இன்னமுதாகக் காட்சியளிக் கும். ஆதலின், 'ஆடி வரும் தேனே!' என்று அவர் விளிப்பார்.

பிள்ளைக்கனி யமுதே - கண்ணம்மா!
பேசும்பொற் சித்திரமே!
அள்ளி யணைத்திடவே - என்முன்னே
ஆடிவரும் தேனே!

தேனுய் இனிக்கும் இன்னமுது கண்ணன் திருக்கோலம். பிள்ளைக் கனியமுது என்றும், வாய் திறந்து பேசும் பொன்வண்ண ஓவியமே என்றும் குழந்தையைச் சிராட்டுவார். சித்திரத் தின் அழகு இவனிடம் உள்ளது. சித்திரம் பேசாது; கண்ணனே வாய்திறந்து பிள்ளை மொழி பேசுவான். சித்திரத்திலும் இது பச்சை யும் சிவப்பும் மஞ்சளும் நீலமும் போன்ற வண்ணக் கலவையில் படைத்தது அல்ல; பொன்னை உருக்கி வண்ணமாக்கி அதில் தோய்த்து எழுதிய பேசும் பொற்சித்திரம் இந்த அதிசயக் குழந்தை! ஆதலின் அவர் கிளி யெனக் கொஞ்சுவார். பேசும் பறவை கிளி யன்றோ?

சின்னஞ்சிறு கிளியே - கண்ணம்மா!
செல்வக் களஞ்சியமே!

கண்ணம்மாவை எட்டியிருந்து கண்ணுரைப் பார்த்துக்கொண்டே இருக்கலாம். ஓடி வரும் போது, குழந்தையை நோக்கின், உள்ளம் தண் ணென்று இருக்கிறது. அங்கும் இங்குமாய்க் குழந்தை அசைந்து திரிகையில், அன்னையின் உடல் ஆவி அனைத்தும் குழந்தையையே சுற்றிச் சுற்றி வருகிறது.

ஓடிவரு கையிலே - கண்ணம்மா!
உள்ளம் குளிருதடீ
ஆடித்திரிதல் கண்டால் - உன்னைப்போய்
ஆவி தழுவுதடீ.

கண்ணனையே பையப் பைய வலம் வரும் அன்னையின் நெஞ்சம், அயலார் இவனைப் புகழ்ந்து பேசுவதைக் கேட்கப் பெருமையில் விம்மிதம் உறுகிறது, மெய்சிலிர்க்க வைப்பது கண்ணனின் அருமை பெருமை. இவனைத் தழுவி உச்சிமோந்தால், ஒருகணம் ஒன்றுமே பிடிபடுவ தில்லை. செருக்குத் தலைக்கேறி எங்கோ கொண்டு சென்றுவிடுகிறது.

உச்சிதனை முகந்தால் - கருவம்
ஓங்கி வளருதடீ
மெச்சியுனை ஊரார் - புகழ்ந்தால்
மேனி சிலிர்க்குதடீ.

ஆம், கண்ணனைப் பெற்றபின் நெஞ்சம் விம்மிதம் பெருதா? மெய் சிலிர்க்காதா? இறுமாப்புத்தான் இராதா?

வெறும் உடற் சிலிர்ப்புக்கூட அல்ல; ஒரு வெறியை ஊட்டுவது இவனுடைய தொடர்பு. குழந்தையை முகத்தோடு அணைத்துக்கொண்டு முத்தமிட்டால், இதயத்தை எங்கோ கொண்டு சென்றுவிடும். கள் உண்டபின் தோன்றும் போதை தரும், கண்ணனின் பட்டுக் கன்னம் பட்டுவிடின். ஆரத் தழுவிடிலோ, அறிவே இயங்க மறுக்க ஓர் உன்மத்த நிலை பிறக்கும்.

கன்னத்தில் முத்தமிட்டால் -
உள்ளம்தான்
கள்வெறி கொள்ளுதடீ
உன்னைத் தழுவிடிலோ - கண்ணம்மா!
உன்மத்த மாகுதடீ.

கண்ணனின் கன்னத்தில் நாம் முத்தம் இடி னும் சரி; இல்லை, இவன் நம் கன்னத்தே பாய்ந்து வந்து முத்தம் கொடுப்பினும் சரி, இன்ப அநுபவம் என்னவோ ஒன்றுதான். இந்தப் பொருள் தொனிக்கும்வண்ணம், பாரதி இங்கு யார் கன்னத்தில் யார் 'முத்தமிட்டால் என்பது விளங்காதவாறு பாடுவார்.

என்னதான் கண்ணபிரான், எம்பெருமான் என்றெல்லாம் கூறிடினும், குழந்தையாக வந்த பின் குவலயத்துக் குழவி போலத்தானே நடந்துகொண்டாக வேண்டும்?

திடீரெனக் கண்கள் சிவக்க முகம் சுரம் காட்டும். தொட்டுப் பார்க்கின், சுட்டுவிடும் உடல்நிலை. உடன், கள்வெறியும் உன்மத்த நிலையும் இருந்த இடம் தெரியாமற்போம். பெருமையில் பூரித்துக் கிடந்த நெஞ்சம் கவலையில் பதைபதைக்கும்.

சற்றுஉன் முகம் சிவந்தால்-மனது
சஞ்சலம் ஆகுதடீ!
நெற்றி சுருங்கக் கண்டால்-எனக்கு
நெஞ்சம் பதைக்குதடீ.

இவ்வாறு நொடிப்போதில் கலங்க வைக்கும் ஆற்றலும் இவனுக்கு உண்டு.

உன்கண்ணில் நீர்வடிந்தால்-
என்நெஞ்சில்
உதிரம் கொட்டுதடீ
என்கண்ணிற் பாவையன்றோ?-
கண்ணம்மா!
என்னுயிர் நின்னதன்றோ?

குழந்தையின் கண்கள் நீரை உகுத்தால், பெற்றவள் உள்ளம் உதிரம் பெருக்கும். கண்ண பெருமானின் விழிநீர்தான் சகல உயிர்களின் உடலிலும் உள்ள இரத்தம் போலும். கண்ணன் அன்னையின் கண்ணுக்குக் கண்ணாக, கண்ணின் கருமணியாக விளங்குபவன். ஈருயிரும் ஒன்றுதானே? 'நின்னுயிர் என்ன தன்றோ?' என் எந்தத் தாயும் கூறலாம். ஆனால், கண்ணனை ஈன்றவள் தன் உயிரையும் இறைவனின் ஓர் அம்சமாக - அங்கமாகத்தானே செப்புதல் வேண்டும்? எனவே, 'என்னுயிர் நின்னதன்றோ?' என்னும் வினா, 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற பக்திக்கோட்பாட்டினை வலியுறுத்துகிறது எனலாம்.

முகம் சிவத்தலும் கண் நீர் உகுத்தலும் சிறுபோதுதான். கண்ணன் எனில், இன்பமும் ஆரவாரக் கொண்டாட்டமும்தான்! துயர் துடைக்க வந்தவன் இவன்.

சொல்லு மழலையிலே-கண்ணம்மா!
துன்பங்கள் தீர்த்திடுவாய்.
முல்லைச் சிரிப்பாலே-எனது
மூர்க்கம் தவிர்த்திடுவாய்.

குழந்தைமொழி கேட்போர் உள்ளத்தைக் கொள்ளை கொள்வது; அவர்களின் உள்ள வேதனைகளைப் போக்கும் அருமருந்து.

மந்தகாசம் எனும் மோகன முறுவலினால் இவன் பெரியவர்களுக்குப் போதியாத உண்மை யாவும் புகன்றுவிடுவான். அருட்பார்வையே முரட்டுத்தனம் களைந்து நல்வழி காட்டவல்லது. முல்லைப் பல்லைக் காட்டிச் சிரித்து மயக்கி, நம் அறியாமையை நயம்பட நவின்றுவிடுபவன் கண்ணபெருமான்.



## 7. ஆயர்தம் கொழுந்தே!

**தொ**ண்டர் அடிப்பொடி எனும் பெயர் பெற்று விளங்கிய ஆழ்வார் விப்ரநாராயணர்; திருவரங்கத்து நம்பெருமானை மிகுந்த ஈடுபாட்டுடன் சரண் போந்தவர். அவர் அருளிய பாமாலை திருமாலை எனப்படும். 'அரங்கமா நகர் உளானே!' என ஸ்ரீரங்கநாதனை அழைத்து அவர் தம் வேண்டுதல் வேண்டாமை இரண்டினையும் ஈசன்முன் வைப்பார். இன்னதுதான் தமக்கு வேண்டும் இன்னது வேண்டேன் என இரண்டும் கூறுவார். அவர் பாடியவற்றுள் மிகப் பிரசித்தி பெற்ற பாடல் இது:—

பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே!
ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகர் உளானே!

திருவரங்கம் பூலோக வைகுந்தம் என ஏத்திப் பேசப்பெறும் திவ்யத் திருப்பதி. அங்குப் பள்ளிகொண்டுள்ள பரந்தாமன் அடியார்க்கு முக்தி அருள்பவன். அந்தத் திருவரங்கநாதனிடமே ஆழ்வார் தாம் தம்முள்ளத்தே கொண்டுள்ள விருப்பு-வெறுப்பினை வெளியிடுவார்.

தமக்கு இந்திரலோகம் சென்று அங்கு ஆட்சி நடத்தும் பதவி கிட்டினும் வேண்டியதில்லை என மிகத் தெளிவாக மறுதளிக்கும் அவர் வேண்டுவது வேறொன்று. திருமாலின் திருமேனி பச்சைவண்ணம். அரங்கநாதனின் மூல மூர்த்தம் பச்சைத் திருமாமேனிதான். மலையாகச் சாய்ந்து யோகநித்திரையில் துயில்பவர் எம்பெருமான். திருவாய், பவள நிறம். கண்ணும் அவ்வண்ணமே. எனவே செந்தாமரைக் கண்ணன் என்கிறோம். பசுமையும் செம்மையும் சேர்ந்து செழுமை கூட்டும் திருத்தோற்றம் பெரியபெருமாள். தேவாதிதேவன் என அச்சுதனை ஆழ்வார் அழைப்பார்—அமரர் ஏறே! ஏறு

எனின் யானை, இடபம், சிங்கம் மூன்றுமே உணர்த்தப்பெறும். அமரருள் ஒரு சிம்மமாகத் திகழும் சர்வேசனை, அவனுக்கே உரிய அச்சுதன் எனும் திருநாமத்தினால் அழைப்பார்.

இதுவரையில் கூறிய யாவும் பொதுவாகத் திருமாலையோ இல்லையேல் பரமபதநாதனையோ குறிப்பதாகும். கரிய திருமேனி, செவ்வாய், கமலக்கண்கள், அச்சுத நாமம், தேவர்க்கு அதிபன்! இவ்வளவும் கூறும் விப்ரநாராயணர் திடீரென எதிரிலுள்ள அர்ச்சாவதார மூர்த்தியையும் விடுத்து, இதுகாறும் கூறிய திருமாலின் பொது மூர்த்தத்தினையும் விட்டுக் கண்ண பெருமானைப் பாடுவார்.

கிருஷ்ண பரமாத்மா என்ற சர்வேசுவரனைக் கூடக் கூறாமல், இடையரின் இடையிலே வளரும் சின்னஞ்சிறு பாலகனான குழந்தைக் கண்ணனை விளிப்பார். குழவி, குழந்தை என்று ஏதும் கூறாமல், கண்ணனின் மாறா இளமையைச் சுட்ட அவர் தாவர இயலில் இளமைக்கு உரிய சொல்லைச் செப்புவது தனியழகு உடைத்து. யானைக்கும் சிங்கத்திற்கும் உரிய கன்றைச் செப்பலாம். அமரருள் ஏறு என்றவர், உடன் கன்றினைக் கூறுதல் பொருந்தும். தொண்டரடிப்பொடி ஆழ்வார் இளந்தளிரைக் குறிக்கும் கொழுந்து என்ற சொல்லை ஆள்கிறார்: 'ஆயர்தம் கொழுந்தே!' குழந்தை கொழுந்து ஆயிற்று! கண்ணனின் குழந்தைத் தோற்றத்தை இவ்வண்ணம் கூறும் ஆழ்வார் இத்துடன் நிறுத்திக்கொண்டு, 'இச்சுவை தவிர' என மேலே தொடர்வார். அச்சுதா, அமரர் ஏறே என்பதற்கெல்லாம் மேலான இனிமை கூட்டும் சொல்லடுக்கு 'ஆயர்தம் கொழுந்தே!' என்பது. இதைவிட வேறு எதுவும் வேண்டேன் என்பது அவர் கோட்பாடு.



# ஞானப் பொறிகள்

## விவேகானந்த வாக்கு

301. ஏதோ ஒரு வகையான இந்திரிய போகாநுபவத்தில் ஒவ்வொரு கணத்தையும் ஈடுபடுத்தியவனாக இருக்கும் மனிதனுக்குங்கூட மரணம் என்பது சம்பவிக்கிறது. அதையொட்டி அவனுங்கூட ஒரு கேள்வி கேட்டேயாக வேண்டியவனாகிறான். 'இது - இந்த வாழ்வு – உண்மைதானா?' என்பதே அந்தக் கேள்வி. சமயதர்மம் என்பது இந்த வினாவுடன் தொடங்குகிறது; இதற்கான விடையுடன் முடிவுறுகிறது.

302. 'வாழ்வுக்கு அப்பால் உள்ளது என்ன? உண்மையான நிலை எது?' என்ற கேள்வியை எழுப்பும் மனச்சஞ்சலத்தை நிறுத்துவதற்கு, அந்தக் கேள்வியை மேலெழாமல் அமுக்கி வைப்பதற்கு, பலர் முயற்சி செய்துள்ளனர். ஆனால், மரணம் என்ற ஒன்று உள்ளவரையில், இவ்வாறு அந்தக் கேள்வியை அமுக்கி வைப்பதற்கான முயற்சிகள் யாவும் தோல்வியேயுறும்.

303. கடந்துபோன காலத்தையும், வரப்போகிற காலத்தையும் மறுத்துரைத்து, நிகழ் காலத்தில் ஒட்டிக்கொள்ள விரும்புகிறவன் வெறும் பித்தனேயாவான். தாயையும் தந்தையையும் மறுத்துக் குழந்தையை மட்டும் உறுத்திக் கூறுவதையே அது ஒக்கும். கடந்த காலம் வரவிருக்கும் காலம் இரண்டையும் மறுக்க வேண்டுமானால் நிகழ்காலத்தையும் மறுத்தேயாக வேண்டும்.

304. ஜடப்பொருள் என்று எதைக் குறிக்கிறோமோ, அது இல்லவே இல்லை என்பதை ருசுப்படுத்துவது சாத்தியமேயாகும். விசை (சக்தி)யின் ஒரு நிலையே ஆகும் ஜடப் பொருள்.

305. உருவமுள்ள பொருள் எதுவாயினும் அது, துண்டுகள் பலவற்றின் சேர்க்கையின் பயனாகவே இருக்க வேண்டும். அதை அசையப் பண்ணுவதற்கு அதன் பின்னேயுள்ள வேறொரு வஸ்து அவசியமேயாகும்.

# நம்பியாண்டார் நம்பி

தமிழ்ப் பேராசிரியர் **ச. ய. சுப்ரமண்யன்**, எம்.ஏ., விவேகானந்தர் கல்லூரி, சென்னை-4

சிந்தனை செய்த வாறே
சிறந்துநீ ஆவாய் என்று
முந்தையோர் சொன்ன வண்ணம்
முழுதுநாம் ஆக என்று
சிந்தனை சிவன்பால் வைத்த
சீரியோர் வாழ்வை எல்லாம்
சிந்தனை செய்து வாழ்வில்
சீரருள் பெறுவோம் யாமே.

'நீ எவ்வண்ணம் சிந்திக்கிறுயோ அவ்வண்ணம் ஆவாய்' என்று நம் முந்தையர் கூறியுள்ளனர். விஞ்ஞானமும் பரிணுமத்தை விளக்க வருங்கால் ஓர் அணு உயிர் தன் இச்சை காரணமாகப் பலபடி உயர்ந்து இன்று பல கோடி உயிர்அணுக்கள் கொண்ட மானிடனுக வளர்ந்துவிட்டது என்று கூறும். உயிர்க்குண மான இச்சாசக்தியும் கிரியாசக்தியுமே ஓரணு உயிரை மனிதனுக ஆக்கிவிட்டது. இனி மனிதன் உடற்பரிணுமம் பெற்று வளர்தல் இல்லை போலும். உள்ளத்தால் உன்னி உயர்ந்து 'நீயே அது' என்ற மகாவாக்கியத்திற்குப் பொருளுணர்தலே இனிப் பரிணுமம் நமக்கு. இதனை உணர்ந்தே முன்னேர் சிந்தனை வலிமை பெறுதவரும் வலிமை பெறும் முறைமையை நமக்குச் செப்பிச் சென்றுள்ளனர். சான்ரோர் வாழ்ந்த நெறிமுறையைச் சிந்தனை செய்யச் செய்ய நம் உள்ளம் வலிமைப்படும். சிறு நதியை நீந்திக் கடக்கும் ஆற்றல் உள்ளவர் நெடுங்கடலை நீந்திக் கடப்பதில்லை. மரக்கலத்தின் உதவியால் சிரமம் ஏதுமின்றி அதனைக் கடந்திடுவர். அதுபோன்றே பிறவியாம் பெருங் கடலைக் கடக்க அடியார் என்னும் தோணியின் துணைகொண்டு நின்றவர் பலர்.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் அமர் நீதியார், இடங்கழியார், இயற்பகையார், இளையான்குடிமாறர், ஏனுதி நாதர், கலிக் கம்பர், காரைக்காலம்மையார் போன்ற இருபதின்மர் சங்கம வழிபாட்டாலே (அடியவர் வழிபாடு) பிறவியை ஒழித்த பெரியோர் அன்ரோ? பன்னிரு ஆழ்வார்களில் ஒருவர் தம்மைத் 'தொண்டரடிப்பொடி' என அழைத்துக்கொள்ளவில்லையா? மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைக் கண்ணனிலும் மேலாகக் கொண்டு ஒழுகிவரவில்லையா? சுந்தரமூர்த்தி சுவாமிகள் சைவ அடியார்கள் அறுபத்துமூவரின் அடியாராகத் தம்மைக் கருதிக்கொண்டு திருத்தொண்டத் தொகை பாடியுள்ளார். பத்துப் பாடல் கொண்ட திருத்தொண்டத் தொகையை விரித்துத் 'திருத்தொண்டர் திருவந்தாதி'யாகப் பாடியவர் சோழ நாட்டில் காவிரி வடகரையின்பால் அமைந்த திருநாரையூரில் வாழ்ந்து பின்பு தேவாரத் திருமுறைகளைக் கண்டெடுத்துத் தொகுத்த பெரியோர் நம்பியாண்டார் நம்பி.

நம்பியாண்டார் நம்பியின் வாழ்க்கை வரலாறு முழுவதும் நமக்குத் தெளிவாகக் கிடைக்கவில்லை. சோழநாட்டுத் திருநாரையூரில் ஆதிசைவ குலத்தில் பிறந்தவர் அவர் என்று தெரிகிறது. ஒரு முறை அவர் தந்தையார் ஒரு பணி காரணமாக வேற்றூர் போகவேண்டிய நிலை ஏற்பட்டது. அவர் நாரையூரில் கோயில் கொண்ட விநாயகப் பெருமான் கோயில் அர்ச்சகர். சுவாமிபூஜை தவருமல் நடக்க வேண்டும் என்பதற்காகத் தம் சின்னஞ்சிறு மகனை அதனைக் கவனித்துச் செய்யும்படி சொல்லி வெளியூர் சென்ருர். சிறுவரான நம்பியாண்டார் நம்பி கோயிலுக்குச் சென்ருர். அவருடைய இயற்பெயரல்ல இது; தந்தையார் இட்ட இயற்பெயர் மறைந்து, பிற்காலத்தார் விநாயகரால் ஆட்கொள்ளப்பட்ட நம்பி என்று வைத்த பெயரே இது. கோயிலில் தந்தையார் செய்து வந்த பூஜைமுறைகளைப் பன்முறையும் உடனிருந்து கண்டவராதலின் முறைதவருது பூஜையை முடித்தார். நைவேத்தியப் பண்டத்தை விநாயகப்பெருமான் முன் வைத்து உண்ண வேண்டினுர். பன்முறை வேண்டியும் பெருமான் உண்ணுதது கண்டு, ''பெருமானே! நைவேத்தியப் பொருள்களை ஏற்றருள்க; இல்லையேல் என் மண்டையை இந்தக் கல்லில் மோதி மடிவேன்'' என்று

தலையைக் கல்லில் மோத முற்பட்டார்! விநாயகப்பெருமான் நைவேத்தியப் பண்டங் களை ஏற்றருளினர் என வரலாறு கூறுகிறது. திருமுறை கண்ட புராணம் இந்தச் செய்திகளை எல்லாம் விரித்துக் கூறுகிறது. நாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரின் திருவருள் பெற்றவர் இவர்; தெய்வத் திருவருளால் தெவிட்டாத செந்தமிழில் பாடும் ஆற்றலும் பெற்றார்.

என்னை நினைந்தடிமை கொண்டென்
இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் — புன்னை
விரசு மகிழ்சோலை வியல்நாரை
ஊர்முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்.

என்ற வெண்பாவே நம்பியாண்டார் நம்பி பாடிய முதற்பா என்று கருதப்படுகிறது. 'திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணி மாலை'யில் அமைந்த முதற் செய்யுள் இது. இவர்தம் நூல்கள் சைவர்தம் வேதமாகிய திருமுறை நூல்களில் பதினோராம் திருமுறை யில் இடம் பெற்றுள்ளன. தேவார நூல்களைத் தில்லையில் காப்பிட்டுக் காத்து வந்த இடத்தை விநாயகப்பெருமான் திருவருளால் கண்டு வெளிப்படுத்தி முறையாக வகுத்தவர் செய்த பனுவல்கள் பதினோராம் திருமுறையில் இடம் பெறுதல் தெய்வத் திருவருளேயாகும்.

நம்பியாண்டார் நம்பி பாடியதாக நமக்குப் பத்து நூல்கள் கிடைத்துள்ளன. திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை தவிர, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருத் தொண்டர் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளை யார் திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை, ஆளுடையபிள்ளையார் திருக் கலம்பகம், ஆளுடையபிள்ளையார் திருத் தொகை, திருநாவுக்கரசுதேவர் திருவேகாதச மாலை என்பன அவை. முதலிரண்டும் தெய்வத் துதியாக அமைய, மற்றவை யாவும் அடியார் துதிகளாகவே அமைந்திருத்தலைக் காணலாம். இவர்தம் நூல்களில் பெரும்பாலானவை திருஞானசம்பந்தரின் துதியாகவே அமைந் துள்ளன என அறியலாம். திருநாவுக்கரசர் பற்றியும் நம்பியாரூரர் பற்றியும் இவர் இன் னும் பல பாடியிருக்கக்கூடும். அவை கிடைக் காமற் போயின. இவர் சுந்தரர் பாடிய திருத் தொண்டத்தொகையை விரித்துத் திருத் தொண்டர் திருவந்தாதியாகப் பாடியுள்ளார். அந்த நூலே பின்னால் சேக்கிழார்பெருமான் 'திருத்தொண்டர் புராணம்' என்ற பெரிய புராணம் பாட முதல்நூலாக அமைந்தது என அறிகிறோம்.

சுந்தரர் திருத்தொண்டத்தொகையில் காட் டாத வரகுண பாண்டியரையும் அவர்தம் திருநீற்றுப் பற்றையும் நம்பியாண்டார் நம்பி,

பொடியேர் தருமேனியன் ஆகிப்
பூசல் புகவடிக்கே
கடிசேர் கணைகுளிப்பக் கண்டு
கோயிற் கருவில்லா
அடியேபட அமையுங்கணை யென்ற
வரகுணன் தன்
முடியே தருகழல் அம்பலத்
தாடிதன் மொய்கழலே.

எனக் குறிப்பர். வாதவூர் அடிகளான மாணிக்க வாசகரின் பாடல்களில் மனமுருகிக் கலந்தவர் நம்பியாண்டார் நம்பி. மணிவாசகர் அருளிய திருக்கோவையாரைக் கண்டபிறகும் பிற புலவர் அகப்பொருட்டுறைப் பாடல்களைப் பாடுவது அறிஞரது நகைப்புக்கு இடமே தருவ தாகும் என்று குறிப்பிடுவர் நம்பியாண்டார் நம்பி.

நம்பியாண்டார் நம்பிக்குத் திருஞானசம்பந் தரிடம் ஆழ்ந்த பக்தி இருந்தது. 'வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்கச் சீகாழிப் பதியிலே தோன்றிச் சின்னஞ் சிறு வய திலே உமையம்மையின் ஞானப் பாலையுண்ட பெருமான் பெருமைகளையும் வரலாற்றினையும் பலவாகப் பாராட்டி இப் பெருமான் புகழைப் பாடுக, வரலாற்றைத் தெளிக, வீடு நிச்சயம்' என்பதைக் காட்டுவார் போலத் தாம் பாடிய நூல்களில் பெரும்பகுதியை ஆளுடையபிள்ளை யின் பெருமைக்கே தந்துள்ளார்.

தம்முடைய திருவந்தாதியில்,

பாரகலத் துன்பம் கடந்தமர ராற்பணியும்
ஏரகலம் பெற்றாலும் இன்னாதால்
— காரகிலின்
தூமங் கமழ்மாடத் தோணி புரத்தலைவன்
நாமம் செவிக்கிசையா நாள்

எனப் பாடி அவரிடம் தமக்கு இருந்த ஆழ்ந்த பற்றினை விளக்கியுள்ளார்.

''பதிகப் பெருவழி காட்டப் பருப்பதக் கோன் பயந்த மதியத் திருநுதல்பங்கன் அருள் பெற வைத்த எங்கள் நிதி'' என்றும், ''தீந் தமிழோர் கண்ணென ஓங்கும் கவுணியர் தீபன்'' என்றும், ''உலகம் பரசும் குணந்திகழ் ஞானசம்பந்தன்'' என்றும் பலவாருகப் பாராட்டியுள்ளமை நம்பிக்குச் சம்பந்தரிடம் உள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்தும்.

வீட்டிற்கு வழியறியா வீணரை எல்லாம் அடியார்பால் ஆற்றுப்படுத்தி உய்ய வழிகாட்டிய பெருமை நம்பியாண்டார் நம்பியின் தெய்விகப் பாடல்களுக்கு உண்டு. அருள்மழை பொழிந்துகொண்டிருக்கிறது. அதிலே வேண்டுமளவு ஏந்திப் பயன்பெருமை மானிடர்தம் குறையே அன்ருே? 'அடியார் பெருமைகளை அறிவோம்; ஆண்டவன் அருளில் கலப்போம்' என்பதே நம்பியாண்டார் நம்பி வையத்து மாந்தர்க்குக் காட்டும் உய்யும் வழி.



**சிறுவர் கதை—சிவகதைகள்:**

# 3. கொம்பன் சுரு

**'கைலாஸ்'**

'ஆறுவது சினம்' என்று கூறினர் ஔவையார்.

சினத்தால் நாம் பிறரை மட்டும் அல்ல, நம்மையும் நாம் துன்பத்தில் ஆழ்த்திக்கொள்வோம். இந்த நீதியை வலியுறுத்தும் ஒரு சிறு கதை இது.

ஒரு நாள் கயிலையில் சிவபெருமான் தனிமையில் இருந்தார். அப்பொழுது இறைவி இறைவனிடம், ''பெருமானே, நீங்கள் எனக்கு உபதேசித்த ஞான ரகசியங்களை நான் முற்றும் மறந்துவிட்டேன். மீண்டும் ஒரு முறை நீங்கள் எனக்கு உபதேசம் செய்ய வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டாள்.

இதைக் கேட்ட பரமசிவனுக்குக் கோபம் மூண்டது. ''சாதாரணப் பெண்களைப் போல, அரியவையான வேதாந்த உபதேசங்களை நீ உன் விளையாட்டுத் தனத்தால் மறந்துபோனுய். அதனுல் நீ புவியில் ஒரு வலைஞனின் மகளாகப் பிறக்கக்கடவாய்'' என்று சபித்துவிட்டார்.

அம்பிகை மிகவும் வேதனைப்பட்டாள். 'பரமனைப் பிரிந்து இருப்பது முடியாது' என்று எண்ணி அவள் துடிப்பதைக் கண்டு இறைவன் மனம் இளகினர். ''தேவி, வருந்தாதே. விரைவில் உன்னை நான் அழைத்துக்கொள்கிறேன்'' என்று கூறினர்.

அப்போது அங்கு விநாயகரும் முருகப்பெருமானும் வந்தனர். நடந்ததை அறிந்ததும் அவர்களும் கோபமுற்றனர். கயிலையங்கிரியில் இருந்த திருமுறைகளையெல்லாம் அவர்கள் இருவரும் எடுத்துக் கடலில் வீசி எறிந்துவிட்டனர். இதைக் கண்ட சிவபெருமான் தம் வாயிற் காவலராகிய நந்திதேவரை அழைத்தார்.

''நந்தியே, நாங்கள் ஏகாந்தமாக இருந்தபொழுது என் உத்தரவு இல்லாமல் நீ இந்த இரண்டு சிறுவர்களையும் உள்ளே விட்டமையால் குற்றம் உள்ள

வனுனய். ஆகையால் நீ கடலில் கொம்பன் சுரு என்னும் மீனுகப் பிறக்கக் கடவாய்'' என்று சபித்தார். அதைக் கேட்ட நந்திதேவர் மிகவும் துக்கப் பட்டார். அதைக் கண்டதும், ''சில காலத்திற்குப் பிறகு உன்னையும் நான் சாபத்திலிருந்து விடுவிக்கிறேன்'' என்று அருளினுர் சிவபெருமான்.

புத்தகங்களை எடுத்து எறிந்த காரணத்தால் குமரப்பெருமான் ஊமை யானுர். விநாயகப்பெருமான் பாதிக்கப்படவில்லை.

நந்திதேவர் நீண்ட கொம்பினையுடைய ஒரு பெரிய சுருவாகக் கடலில் பிறந்து, அதிலிருந்த ஜீவராசிகளை மட்டுமல்லாமல் எதிர்ப்பட்ட கப்பல்களையும் கட்டுமரங்களையும் மோதிச் சின்னபின்னப்படுத்தி அவற்றிலிருந்த மனிதர்களையும் கொன்று தின்று தீர்த்தார். பாண்டியநாட்டில் இருந்த ஒரு துறைமுகத்தின் அருகில் அவர் வந்தடைந்தார்.

பார்வதிதேவி, அந்தக் கரையை அடுத்த ஓர் ஊரில் வாழ்ந்து வந்த செம்படவர்தலைவன் தாசபூபதியின் மகளாகப் பிறந்து வளர்ந்து வந்தாள்.

ஆண்டுகள் பல கழிந்தன. மீனின் உபத்திரவம் தாங்க முடியவில்லை. தாசபூபதி ஓர் அறிக்கை விடுத்தான். ''எந்த இளைஞன் அந்தச் சுருவைப் பிடித்து வருகிருனே, அவனுக்கே என் மகளை மணம்செய்து கொடுப்பேன்'' என்று அவன் அறிவித்தான்.

பல மீனவர்கள் வந்து வலைவீசிப் பார்த்து அந்த மீனுக்கே இரை யானுர்கள். சுருவின் கொடுமை மேலும் மேலும் அதிகரித்தது.

ஒரு நாள், வலிமையும் வனப்பும் ஒருங்கே பொருந்திய ஒரு வாலிப வலைஞன் ஒரு பெரிய வலையை முதுகில் சுமந்துகொண்டு அந்த ஊருக்கு வந்தான். அவன் தாசபூபதியின் அறிக்கையை அறிந்ததும் அலட்சியமாகச் சிரித்துக்கொண்டு கட்டுமரத்தில் ஏறிக் கடலில் தன்னந்தனியே சென்ருன். அந்த ஆணழகன் ஆபத்தை எதிர்கொண்டு சென்றதைக் கண்ட தாசபூபதி மனம் வருந்தினுன்.

ஆனுல் அந்த இளைஞன் நடுக்கடலை அடைந்ததும், தன் வலையை விரித் தான். அதை உதறிக் கடலுக்குள் வீசினுன். பிறரால் எறியப்பட்ட வலைகளை எல்லாம் கிழித்தெறிந்த அந்தச் சுரு, இளைஞனின் வலையில் சிக்கி வலியிழந்து ஒடுங்கியது. இளைஞன் கட்டுமரத்தோடு கரை சேர்ந்தான். அதை எடுத்து அவன் வெளியே போட்டதும் அதன் மூச்சு ஒடுங்கியது, இறந்தது.

தாசபூபதி தன் மகளை அந்த வலைஞனுக்குத் திருமணம் செய்து கொடுத் தான். கொம்பன் சுரு நந்திதேவராக மாறியது. அதன் மீது அமர்ந்தபடி பரமசிவனும் பார்வதியும் அவர்கள் அனைவருக்கும் காட்சியளித்து அருளினுர்கள். மீனவர்கள் பெருமகிழ்ச்சி கொண்டனர்.

அவர்களை ஆசிர்வதித்துவிட்டு இறைவன் மற்றவர்களுடன் மறைந்தார்.

# பொங்கல் விழா

பேராசிரியர் **வ. பெருமாள்**

*தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், முதல்நிலைக் கல்லூரி,*
*உரிகம், கோலார் தங்க வயல், கர்நாடகம்*

மக்கள் கொண்டாடும் விழாக்கள் எல்லாவற்றையும் தனிவிழா, நினைவு விழா, திருவிழா, சமுதாய விழா, விருந்து விழா, வைதிக விழா, நாட்டு (தேசிய) விழா, விளையாட்டு விழா, இயற்கை விழா என ஒன்பது வகையாகப் பிரிக்கலாம். தனிப்பட்டோரின் பிறந்தநாள் கொண்டாட்டம் தனிவிழாவின்பாற்படும். செயற்கரிய செய்து மறைந்த பெரியோரை ஆண்டுக்கொரு முறை நினைவுபடுத்தும் வகையில் விழா எடுப்பது நினைவு விழா எனப்படும். திருவள்ளுவர் நினைவு விழா இந்த வகையைச் சேர்ந்தது. கோயிலில் ஆண்டுக்கு ஒரு முறை சிறப்பாக நடைபெறும் விழா திருவிழா எனப்படும். திருவிழா என்பதற்குத் தெய்வ விழா என்பது பொருள். திருமணம், காதணி முதலிய நிகழ்ச்சிகளில் உற்றார் உறவினர் நண்பர்கள் முதலியோர் ஒன்றுகூடிச் சமுதாய உணர்ச்சியுடன் கொண்டாடுகிற விழா சமுதாய விழா எனப்படும். புதிதாகப் பதவியேற்கும் ஒருவரை அகங்குளிர முகம் மலரத் தேநீர் விருந்து, அறுசுவை உண்டி முதலிய அன்பு உபசரிப்புடன் வரவேற்றுக் கொண்டாடும் விழாவை விருந்து விழா என்று குறிப்பிடலாம். விருந்து என்னும் சொல்லுக்குப் புதுமை என்று பொருள். வைதிகத்துடனும் புராணக் கதையுடனும் தொடர்புடைய விழா வைதிக விழா ஆகும். தீபாவளி இந்த வகையைச் சேர்ந்தது. நாட்டு உணர்ச்சி, நாட்டு இயக்கம், நாட்டு எழுச்சி, நாட்டுப் பற்று, நாட்டு நிகழ்ச்சி, நாட்டு விடுதலை ஆகியவற்றை மையமாகக் கொண்டு எடுக்கப்படும் விழா நாட்டு விழா எனப்படும். விடுதலை நாள் விழா, குடியரசு விழா முதலியவை இவ் வகையைச் சேர்ந்தவை. ஓட்டம், ஆட்டம் முதலிய விளையாட்டு நிகழ்ச்சி, விளையாட்டு விழாவின்பாற்படும். இயற்கையோடு இணைந்தும் இயைந்தும் இயற்கைச் சூழ்நிலைக்கிடையே கொண்டாடப்படும் விழாவை இயற்கை விழா எனலாம். பொங்கல் விழா இயற்கை விழாவுக்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

கேரள மாநிலத்தில் ஓணமும், கன்னட மாநிலத்தில் தசராவும், வடநாட்டில் தீபாவளியும் மிகச் சிறப்பாகக் கொண்டாடுவதைப் போலத் தமிழகத்தில் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப்பெறும் விழா பொங்கல் விழாவாகும். எனவே, இவ் விழா, தமிழர் திருநாள் எனப் பெயர் பெற்றது. இந்த விழா உழவுத் தொழில் சிறப்பாக நடைபெறும் மருத நிலத்தில் உழவரால் கொண்டாடப்பெறுவதனால் இது 'உழவர் விழா' அல்லது 'உழவர் திருநாள்' என்ற பெயரும் பெற்றது. அறுவடையின் நற்பயனைத் துய்க்கும் விழாவாக இது விளங்குவதனால் அறுவடை விழா எனவும் இது குறிக்கப்பெறுகிறது. 'பொங்கலோ பொங்கல்' என்னும் இன்ப முழக்கத்திற்கிடையே புதுப் பானையில் பால் பொங்க, உள்ளத்தில் உவகை பொங்க, ஊரிலும் நாட்டிலும் இன்பம் பொங்க, கதிரவன், இந்திரன், கால்நடை, மக்கள் முதலியோர்க்குப் பச்சரிசியைப் பக்குவமாகப் பொங்கி இன்ப ஊற்றுப் பெருக்கெடுத்துப் பொங்குமாறு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெறுவதனால் இவ் விழா பொங்கல் என்று அருமையாகவும் பெருமையாகவும் குறிக்கப்படுகிறது. பொங்கலின்போது ஒவ்வொரு வீடும் வெள்ளையடிக்கப்பெற்றுப் புத்தகமாக (புதிய அகமாக)த் தோன்றும். எல்லோரும் புத்தாடை அணிந்திருப்பர். புத் தடுப்பு மூட்டி, புதுப்பானையில் புத்தரிசியிட்டுப் பொங்கல் இடுவர். தோட்டத்தில் புதிதாகப் பயிராகிய கரும்பு, தேங்காய், பூசனி, மஞ்சள், அவரை, கீரை, வள்ளி முதலியவற்றைப் பயன்படுத்திப் பொங்கலைப் புதுநாளாகக் கொண்டாடுவார்கள். மாட்டுப் பொங்கலன்று மாடுகளைக் குளிப்பாட்டி அவற்றின் கொம்புகளுக்கு

வண்ணம் பூசி ஒப்பனை செய்வார்கள். மாடுகள் யாவும் புது மாடுகளாகத் தெரியும். பொங்கல் விழாவின்போது எங்கே பார்த்தாலும் புத்தம் புதிய காட்சியாகவே தோன்றும். எனவே பொங்கல் விழாவைப் புது விழா என்று தயங் காமல் உரைக்கலாம்.

'ஆடிப் பட்டம் தேடி விதை' என்பது, மருத நிலத்தில் தோன்றிய உழவுப் பழமொழி. ஆடி முதல் மார்கழி இறுதிவரையில் நெல் பயிரிடும் காலம். இந்த அரையாண்டுக் காலம் உழவர் மிகவும் கடுமையாக மாடு போல் உழைக்க வேண்டிய காலமாகும். ஆடித் திங்களில் கடுங் காற்று வீசும். 'ஆடிக் காற்றில் அம்மியும் பறக் கும்' என்பது பழமொழி. ஐப்பசித் திங்களில் மழை பெய்துகொண்டே இருக்கும். 'ஐப்பசி மாதம் அடைமழை' என்பது மற்ருெரு பழ மொழி. மார்கழித் திங்களில் கடுங்குளிர் என்பது சொல்லாமலே விளங்கும். இவ்வாறு கடுங்காற்றிலும் அடைமழையிலும் கொடுங் குளிரிலும் அல்லும் பகலும் உழன்று உழைத்த உழவர்களின் இன்பநாளே தைத் திங்கள் முதல்நாள். தைத்திங்கள் முதல்நாள் வெறும் நாளாக இல்லாமல் திருநாளாக விளங் குகிறது. ஆறு திங்களாக உழவர் பட்ட துன்பமெல்லாம் நீங்கும் நன்னுளாகிய பொன் னுளே தைத் திருநாள். 'தை பிறந்தால் வழி பிறக்கும்' என்பது உழவர் வாழ்வில் பொங்கி மலர்ந்த பழமொழி.

பொங்கல் விழா ஒருநாள் விழாவன்று. இது ஒரு தொடர்விழா. மார்கழித் திங்கள் இறுதி நாள் வீட்டிலுள்ள புற அழுக்கையும் மனத்தி லுள்ள அக அழுக்கையும் போக்குகின்ற போக்கி (போகி) விழாவாக - துப்புரவு விழா வாகக் காட்சியளிக்கிறது. தைத்திங்கள் முதல் நாள் பெரும் பொங்கலாகத் தலைமை விழா வாகத் தோன்றுகிறது. மாட்டுப்பொங்கல் உழ வரின் செய்ந்நன்றி உணர்வைக் காட்டுகிற நன்றி விழாவாக விளங்குகிறது. மாட்டுப் பொங்கலன்று நடைபெறுகிற மஞ்சுவிரட்டு (ஏறுதழுவுதல், ஜல்லிக்கட்டு) வீர விழா வாகும். இறுதிநாள் நடைபெறுகிற காணும் பொங்கல் ஒருவரை ஒருவர் கண்டு நலம் விசாரித்துப் பெரியோரின் நல்வாழ்த்தைப் பெறுகிற சமுதாய விழா (கணுப்பொங்கல்) ஆகும். போக்கிவிழா தூய்மை விழா; பெரும் பொங்கல் விழா இன்ப விழா; மாட்டுப்பொங் கல் செய்ந்நன்றி விழாவும் வீரவிழாவும் ஆகும்; காணும் பொங்கல் சமுதாய விழா ஆகும். இவ்வாறு நான்கு நாட்களாகப் பேருவகை யுடன் கொண்டாடப்பெறுகிற பொங்கல் விழா ஒரு திருவிழா; பெருவிழா; பொன்விழா; நம் எல்லோர்க்கும் ஏற்ற நல்விழா ஆகும். அன்றே —பொங்கலன்றே—சுவாமி விவேகானந்தரும் அவதரித்தார். ஆன்மிக நலம் பொங்க அவனி யில் அவதரித்த சுவாமிஜி நாமம் வாழ்க!

பானையில் பாலும் உள்ளத்தில் இன்பமும் இணைந்து பாரதமும் ஆன்மிகத்தில் பொங்குக!



## இன்பம் எங்கே?

இன்பம் எங்குமுண்டு; அதன் ஊற்றுச் சுரப்பது நமது உள்ளத்திலே. —ரஸ்கின்

மலையைப் போல வானளாவி ஓங்குவது எனக்கு இன்பமளிப்பதாகத் தோன்ற வில்லை. மண்ணிலான எனது உடல் அக்கம்பக்கத்து நிலத்தில் பரவிவிட வேண்டும்; இதில்தான் எனக்கு ஆனந்தம். —விநோபா பாவே

என் விருப்பங்களை நிறைவேற்றுவதனுல் அல்ல; அவற்றை அடக்குவதனுலேயே இன்பம் பெற நான் பயின்றேன். —ஜான் ஸ்டுவர்ட் மில்

இன்பம்பற்றி யாவரும் பேசுவர், ஆனுல் அதை அறிபவர் அரியவர். —ரோலண்ட்

# ஸ்ரீ ஸ்வானந்த புவன்

திரு ஸி. ராஜப்பா

நாகர்கோயிலில் சப்-ரிஜிஸ்திரராரகப் பணி புரிந்த அந்த மகாராஷ்டிரருக்கு மகாகணபதியிடம் அளவு கடந்த பக்தி ஏற்பட்டதற்கு, அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த இரண்டு முக்கிய நிகழ்ச்சிகளே காரணம்.

ஸ்ரீ ராமசந்திர டபீர், தாம் பதவியிலிருந்து ஓய்வு பெற்றதும் தஞ்சையில் குடியேறினர். தென்னாட்டில் மகாராஷ்டிரர்கள் அதிகம் வாழும் இடம் தஞ்சை மாநகர். கணேச சதுர்த்தியைச் சிறப்பாக ஆண்டுதோறும் மகாராஷ்டிரத்தில் கொண்டாடும் வழக்கம் இன்றும் இருந்து வருகிறது. சத்ரபதி சிவாஜி மகாராஜ் 'ஜய் பவானி' கோஷம் எழுப்புபவராக இருந்தும் ராய்கட் கோட்டையில் வலப்பக்கம் துதிக்கை சுருண்ட கணேசர் விக்கிரகம் ஒன்றைப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தார்.

கணேசரிடம் மிகுந்த பக்தி கொண்ட ஸ்ரீ ராமசந்திர டபீர், தஞ்சை கருத்தட்டாங்குடி செல்லும் மார்க்கத்தில் **'ஸ்ரீ ஸ்வானந்த புவன்'** என்ற பெயரில் சோலை போன்ற ஓர் இடத்தை விலைக்கு வாங்கி, அதன் மத்தியில் அழகிய கணேசர் ஆலயம் ஒன்றை நிர்மித்தார். 1924-இல் நிறுவிய இந்தக் கோயிலுக்கும் மற்றப் பிள்ளையார் கோயில்களுக்கும் உள்ள நடைமுறை வழக்கங்களில் மாறுபாடு உண்டு. விசேஷ நாட்களில் ஊர்வலமாகக் கோயிலிலிருந்து சுவாமி புறப்படுவது போன்ற ஏற்பாடு இந்தக் கோயிலில் இல்லை. கணேசரின் பதினாறு திருநாமங்களில் **'ஹேரம்ப'** என்ற பெயரில் இங்கே மகாகணபதியை அழைக்கிறார்கள். ஸ்ரீ டபீர் தோற்றுவித்த கோயில் என்பதை நினைவுறுத்துவது போல் 'டபீர் கணேசர்' என்ற பெயரே இங்கே நிலைத்துவிட்டது.

நாகர்கோயிலில் தமக்குக் கிடைத்த கணேசர் பிம்பத்தைப் பிரதிஷ்டை செய்து தாமே பல ஆண்டுகள் பூஜித்து வந்தார் ஸ்ரீ டபீர். அதன் பிறகு அன்பர்களின் ஆதரவு பெருகி, பளிங்குக் கல்லினால் உருவாக்கிய அழகிய கணேச விக்கிரகம் இப்போது கண்ணாடிப்பீரோவுக்குள் மூல விக்கிரகமாகக் கோயிலில் காட்சி அளிக்கிறது.

லண்டனிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் கடந்த 43 வருஷங்களாக இதற்கு அன்பர்களின் நன்கொடை வந்துகொண்டிருக்கிறது. இதற்கு அடிக்கல் நாட்டியவர் லண்டனைச் சேர்ந்த பிரபலஸ்தரான எச். எஸ். ஷீல்டு என்ற கனவான். இன்றும் அவர் குடும்பத்தினர் இந்தக் கோயிலுக்கு மாதந்தோறும் காணிக்கை அனுப்பிக்கொண்டிருக்கிறார்கள்.

ஆண்டுதோறும் கணேச சதுர்த்தியை இங்கே வெகு சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். ஆண்டுதோறும் நவம்பர் மாதம் 'ஸ்ரீ ஸ்வானந்த புவன'த்தின் ஆண்டுவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. இந்த ஆண்டு நவம்பருடன் 52 ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன 'டபீர் கணேசர்' கோயிலுக்கு!

குறிப்பாக, பிரதி மாதமும் 'கிருஷ்ணபட்ச சதுர்த்தி'யை, 'ஸங்கடஹர சதுர்த்தி' என்று இந்தக் கோயிலில் கொண்டாடுகிறார்கள். அன்று தேங்காய், பழம், அவல், பொரி போன்றவற்றையே நிவேதனப் பொருளாக வழங்குகிறார்கள். ஸ்ரீகுங்குமம் மட்டுமே பிரசாதமாகக் கொடுக்கப்படும். விபூதி கிடையாது. நெய்யும் பாலும் நிவேதனப் பொருள்களில் சேர்க்கப்படுவதில்லை. அறுகம்புற்கட்டுகளை 21 புல் அடங்கிய கட்டுகளாகக் கோயிலுக்கு வரும் அன்பர்கள் பூஜைக்குக் கட்டி வைக்கிறார்கள். துளசி சேர்ப்பதில்லை.

ஸங்கடஹர சதுர்த்தியன்று கணேசபக்தர் டபீர் காலையில் சூரியோதயம் முதல் இரவு சந்திரோதயம் வரை நீர் தவிர எதுவும் உட்கொள்ளமாட்டார். சந்திரோதயம் இரவு 9-30 மணிக்கு மேல்தான் அன்று தோன்றும். இரவில் சந்திரனைப் பார்த்தபின்பு பிள்ளையாருக்கும், சதுர்த்தி தேவிக்கும், சந்திரனுக்கும் அர்க்கியம் கொடுத்தபின் ஸ்ரீ முத்கல புராணத்திலுள்ள 21 ஏகதந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லி, அறுகம்புல்லால் கணேசரை அர்ச்சனை செய்து, தூப தீபங்கள் காண்பித்தபின்பே

விரதத்தை முடிப்பாராம். அதன்பிறகு உப்பு, காரம் சேர்க்காமல், சர்க்கரைப் பொங்கலோ பழமோ உட்கொள்வாராம். இதே முறையை அவர் மறைந்தபிறகும் இன்றும் இந்தக் கோயிலுக்கு வரும் பக்தர்கள் கடைப்பிடித்து வருகிறார்கள். 1944-ஆம் ஆண்டு பன்னிரண்டு வயதுச் சிறுவனாக இருந்தபோது நான் தெரிந்துகொண்ட இந்த விவரங்களை இன்றும் கடைப்பிடித்து வருவதில் மிகவும் நிம்மதியடைகிறேன். 'மஞ்சரி' பத்திரிகையில் இந்த விவரங்களை எழுதினபோது பல அன்பர்கள் கடிதத் தொடர்பு கொண்டு ஸங்கடஹர சதுர்த்தி விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டனர்.

செவ்வாய்க்கிழமையும் சதுர்த்தியும் கூடிய தினத்தன்று வரும் ஸங்கடஹர சதுர்த்தியை 'அங்காரக சதுர்த்தி' என்று சிறப்பாகக் கொண்டாடுவது வழக்கம்.

மாசி மாதம், கிருஷ்ணபட்சம், செவ்வாய்க்கிழமையன்று வரும் சதுர்த்தி தினம் கணேசருக்கு உகந்த ஸங்கடஹர சதுர்த்தி விரதத்தைத் தொடங்குவதற்கு ஏற்ற நாள். ஒவ்வொரு மாதச் சதுர்த்தியிலும் சதுர்த்தி விரதம் இருந்து, ஏகதந்த ஸ்தோத்திரத்தையும் அங்காரக சதுர்த்தி ஸ்தோத்திரத்தையும் பாராயணம் செய்து கணேசரை வழிபடுவதனால், எந்தச் சோதனைகளையும் மீறி முன்னேற இயலும்.

பூமிபுத்திரனான அங்காரகன் (செவ்வாய்) கடன், வியாதி, சத்துரு இவற்றுக்கு அதிபதி. இந்தச் சதுர்த்தி விரதம் இருப்பதனால் அங்காரகப் பிரீதி ஏற்படுவதுடன் கணேசரின் அருளையும் பெற இயலும்.

கார்த்தவீரியனுடைய தந்தைக்குப் பிரம்மதேவர் கூறுவதாக ஒரு கதை உண்டு. அங்காரகன் கணேசரைக் குறித்து நீண்ட நாள் தவம் செய்தான். மாசி மாதம் கிருஷ்ணபட்ச சதுர்த்தியன்று சந்திரோதய காலத்தில் கணேசர் அவன்முன் தோன்றினார். அவன் அப்போது, ''இன்று தங்களைக் குறித்து விரதம் அநுஷ்டிப்பவருடைய சங்கடங்கள் அனைத்தையும் தாங்கள் நீக்கி, அவர்களுக்கு மனநிம்மதி அளிக்க வேண்டும்'' என்று கேட்டான்.

அங்காரகனின் பக்தியைப் பாராட்டி, ''உன்னை நவக்கிரகங்களில் ஒருவனாக இருக்க ஆசிர்வதிக்கிறேன்'' என்று கூறிக் கணேசர் மறைந்தார். அதுமுதல் அங்காரகன் நவக்கிரகங்களில் ஒருவனாகும் வாய்ப்புப் பெற்றான்.

அங்காரக சதுர்த்தியன்று, பாராயணம் செய்ய வேண்டிய ஸ்தோத்திரம் இது:—

பரத்வாஜஸமுத்பந்நோ
ப்ருத்வ்யாம் பௌமோ மஹாமதி: |
கணநாம் த்வேதி மந்த்ரேண
பூஜயாமாஸ விக்நபம் || 1 ||
ததாப ஸ தபோ ரம்யம்
த்யாத்வா தேவம் கஜாநநம் |
பரிதேராச நகராத்
பஸ்சிமே வநஸம்ஸ்திதம் || 2 ||
ஶதவர்ஷைர் கணாத்யக்ஷ:
ப்ரஸந்நஸ் தம் யயௌ ந்ருப |
வரம் ப்ரூஹி மஹாபாக
பூமிபுத்ரேதி ஸோப்ரவீத் || 3 ||
ததோ பௌமோ கணேஶம்
ஸம்பூஜ்ய பக்திபாவத: |
ஸ்துத்வா தம் ஸ ஜகாதேதி
வரம் ஸர்வஸுகப்ரதம் || 4 ||
நரதேஹேந யுக்தோஹம்
ததாபி கணநாயக |
இச்சாமி சாம்ருதம் மாதுர்
க்ரஹோ பவாமி மாநத || 5 ||
தவ பக்தைகநிலயம்
நாம்நா மங்கலஸம்ஜ்ஞகம் |
ருணஹர்த்தாரமேவம் மாம்
தநப்ரதம் குரு ப்ரபோ || 6 ||
மாகக்ருஷ்ணசதுர்த்யாம் யத்
தர்ஶநம் தே மயா க்ருதம் |
மயா யுக்தா ததோ தேவீ
மஹாபுண்யப்ரதாஸ்து ஸா || 7 ||
ததேதி கணநாதேந
க்ருதம் ஸர்வம் நராதிப |
அதோங்காரயுதா புண்ய-
சதுர்த்தீ முக்யதாம் கதா || 8 ||

வேறு எந்தக் கணேசர் ஆலயத்திலும் இல்லாத சில விசேஷ விதிமுறைகளை, டபீர் கணேசர் ஆலயமான தஞ்சைக் கண்ணாடிப் பிள்ளையார் கோயிலில் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கதோர் அம்சம்.

கணேச சதுர்த்தியின் மகிமை வடநாடு, தென்னாடு ஆகிய இரண்டிலும் பரவியிருப்பதுடன் கடல்கடந்த ஜாவா, சுமத்ரா, இந்தோனேஷியாவிலும், மலைநாடான திபேத்திலுங் கூடப் பரவியுள்ளது.

# விவேகானந்த விளக்கு

'தமிழமுதன்'

துணிவு கொண்ட இளைஞர்காள்!
தொழிலில் அரிய செயப்பிறந்திர்!
தணிவில் லாத நம்பிக்கை
தாங்கி நிற்பீர்! உமைக்கண்டே
அணிமை வந்து குரைநாய்க்கும்
அஞ்சல் வேண்டா; வானத்துக்
கணித்தற் கியலாப் பேரிடிக்கும்
கவலை ஒழிக! நிமிர்வுறுக!

நாட்டின் தேவை பெருவீரர்;
நலஞ்செய் வீரர் ஆவீரே!
மூட்டும் மின்னின் நெருப்பாற்றல்
முரசாய் அதிரத் துணிவீரே!
தேட்டஞ் சேர்க்குஞ் செயலெல்லாம்
தெளிந்தார் கண்ணே கைகூடும்!
வாட்ட மின்றி மனஅமைதி
வயங்க நாளும் காண்பீரே!

ஆற்றல் கொண்டோர் அழலாமோ?
ஆற்றல் கொண்ட மூவுலகும்
போற்றும் வண்ணம் ஆன்மாவால்
பொருந்தும் வெற்றி கொள்வீரே!
ஆற்றல் விழைவார் பேடிமையை
அகற்றி நிற்பின் திருமகளும்
போற்றி நாடிப் பொலிவிப்பாள்!
பொறுமை யுளத்தீர்! முன்வருவீர்!

மெய்ம்மை வாழ்வு வலிமையே;
மெய்ம்மைத் தாழ்வே வலியின்மை.
மெய்ம்மை இன்பம் வலிமையே;
மெய்ம்மைத் துன்பே வலியின்மை.
மெய்ம்மை வலியை மேவாதார்
விரைந்தே அழிவை மேவிடுவார்;
மெய்ம்மை பெருக்கி வலிவுற்று
மெச்சும் வாழ்வை எய்திடுவீர்.

பொய்யும் களவும் புன்கொலையும்
பொருந்தா அறிவுச் செயல்பிறவும்
மெய்யில் வலிமை அற்றார்பால்
விரைந்தே நாளும் தலைதூக்கும்;
செய்யும் கொடுமைக்கு ஒரெல்லை
செப்ப இயலாச் செருக்கரினைக்
கொய்ய எண்ணும் மாந்தர்க்கோ
கூர்த்த வலிமை பெருந்தேவை.

இயற்கை தன்னை மீறுதற்காய்
இயல்பாய் எதிர்த்துப் போராடி
முயலல் மாந்தர் கடமையாம்;
மூல இயற்கை இருகூறு;
வியங்கொள் அகமும் புறமும்அவை;
வெற்றி புறத்திற் கெளிதேயாம்!
மயலை மிகுக்கும் அகவியற்கை
மறித்து மாற்றல் பேராண்மை!

வஞ்சங் கொண்டோர் பெரும்பணிகள்
வகையாய் ஆற்றல் இயலாதால்.
நெஞ்சில் அன்பைப் பெருக்கிடுவீர்!
நிகரில் ஆற்றல் உரங்கொள்வீர்!
செஞ்சொல் சொல்வீர்! பேருண்மை
சிறக்க உணர்வீர்! மாற்றலர்பால்
அஞ்சும் பான்மை தனையகற்றி
ஆண்மை கொள்வீர்! வெல்வீரே!

ஆழி சூழ்ந்த இவ்வுலகில்
அறிவைப் பெருக்கும் கருத்துக்கள்
ஊழி வெள்ளம் எனவேதான்
உண்மை நூலால் வெளிப்பட்டுக்
கீழை மேலை தென்வடக்குத்
திக்கில் எல்லாம் விரவட்டும்!
பேழை நிறைக்கும் பேருண்மை
பெருந்தீ என்னப் பரவட்டும்!

தூய்மை வேண்டிப் போராடத்
துணிந்த பின்னர் மன்னுடலின்
மாய்வை எண்ணி மயக்குற்று
வருந்தல் வேண்டா; அழிவுறினும்
வாய்மை காக்கும் மரணமென்று
வரவு நல்கி அமைவுறுக!
தோய்வின் கருத்தும் உண்மையும்
துலங்கும் வெற்றி சேர்த்திடுமே!

தெய்வத் தன்மை மேலோங்கித்
திகழும் ஆன்மா உடையோரே!
மெய்யாய் அகத்தும் புறத்திலுமே
மேவும் அவாக்கள் தமைஅடக்கிச்
செய்கை எண்ணம் சொல்வழியில்
சீர்மை பேணி நெறிசெய்து
தெய்வத் தன்மை விளக்கமுறும்
தெளிந்த குறிக்கோள் வாழ்வேற்பீர்!

# நாங்கள் சென்ற நற்பயணம்

ஸ்ரீமதி **கோகிலம் காளஹஸ்தி**

*தாளாளர், ஸ்ரீ சாரதா வித்யாலயா பெண்கள் மாடல் உயர்நிலைப் பள்ளி, சென்னை-17*

**முன்னுரை**

**செ**ன்ற 1976-ஆம் ஆண்டு மே மாதத்தில் நாங்கள் விடுமுறையில் வடநாட்டு ஸ்தல யாத்திரையை மேற்கொண்டோம். அப்போது பலர், ''இந்தக் கொளுத்தும் வெயிலிலா போகிறீர்கள்? வடநாட்டிலே உஷ்ணம் அதிகம். மணற்காற்று உடலைக் கிள்ளும். அங்கே போகிற நீங்கள் அறைகளில் அடைபட்டுத்தான் கிடக்கப் போகிறீர்கள்; வெளியே போனால் மண்டை வெடித்துவிடும்'' என்றெல்லாம் கூறிப் பய முறுத்தினர்கள். நாங்கள் பின்வாங்கவில்லை. எங்களில் பெரும்பாலானவர் ஆசிரியைகள்; கோடை விடுமுறையில்தான் நீண்ட பயணம் போக முடியும். தாக்கும் வெயிலிலிருந்து தப்ப வழிமுறைகளை அறிந்துகொண்டு ஸ்ரீகுருதேவர் மீது பாரத்தைப் போட்டுவிட்டுத் தைரிய மாகவே கிளம்பினோம். இறைவனுடைய திரு வருள் கூட்டி வைக்காமல் ஒரு காரியமும் நடப்பதில்லை. எதுவும் செயற்பட்டு வெற்றி கிட்டினுல் அது அவனுடைய திருவருளேதான். நம் செயலால் ஆவதொன்றில்லை என்பதை எங்கள் பிரயாணம் முடிந்தபின்பே உணர்ந்து பகவானுக்கு நன்றி செலுத்தினோம்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் அருள்பாலிக்க, பதினெட்டுப் பெண்கள் கொண்ட ஒரு குழு வாக நாங்கள் வடநாட்டு யாத்திரை செய்யப் புறப்பட்டோம். எங்கள் குழுவில் வயதில் 30 முதல் 65 வரை உள்ளவர்கள் இருந்தனர். பெரும்பாலோர் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பள்ளி களில் பணியாற்றுபவர்கள்; மூவர் மட்டும் ஓய்வு பெற்றவர்கள். சிலர் மடத்துடன் நீண்ட தொடர்பு கொண்டவர். எல்லோரும் ஸ்ரீகுரு தேவரின் பக்தர்கள். ஆகவே இந்த ஸத்ஸங்க கோஷ்டியில்—வயது, நிலை ஆகியவற்றில் இருந்த வேறுபாடுகளை விலக்கி, பக்தர்களாக—தூய அன்னையின் குழந்தைகளாகப் புறப் பட்டோம். எல்லோரிடமும் சகோதரத்துவ உணர்வுதான் இருந்தது. ஆகவே எங்கள் பயண மும் திவ்ய யாத்திரையாக மிளிர்ந்தது. எங்கள் அநுபவங்களை மற்றவரோடு பகிர்ந்துகொள்வ தனுல் பிறர்க்கும் அது தூண்டுகோலாகவும், ஏற்படக்கூடிய சில சங்கடங்களுக்கு எச்சரிக்கை யாகவும் இருக்கும் என்பதற்காகவே இந்தக் கட்டுரை.

புண்ணிய க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் என்று சொல்லப்பெறுமவற்றில் கங்கை, யமுனை, நர் மதை என்ற தீரங்களும், பிரயாகை, காசி, கயா, புரி, புவனேச்வரம் என்ற க்ஷேத்திரங் களோடு, ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் கொண் டிருக்கும் பேலூர் மடமும் தவமியற்றி வாழ்ந்த தக்ஷிணேச்வரமும் உள்ள கல்கத்தாவும் எங் களுக்குத் திவ்ய க்ஷேத்திரங்களாக அமைந் தன. எங்கள் குறுகிய கால அளவில் நாங்கள் செய்த நற்பயணம் எங்களுக்கு உவப்பிலா ஆனந்தமாக அமைந்தது.

**பிரயாகை நோக்கி முதற் பயணம்**

அன்று, 1976, மே திங்கள் எட்டாம் நாள். காலை 6-15 மணிக்கு சென்னை ஸென்ட்ரல் ரெயில்நிலையத்தில் சென்னை-வாராணசி ஸ்பெ ஷல் வண்டியில் புறப்பட்டோம். உள்ளத்தில் உவகை பொங்க, கனிந்த பக்திப் பிரவாகத் தால், வண்டி நகர்ந்ததும், ''ஜய் ஸ்ரீகுரு மகராஜ்ஜீகீ ஜய்! ஜய் மஹாமாயீகீ ஜய்! ஜய் ஸ்வாமீஜீ மகராஜ்ஜீகீ ஜய்!'' என்ற கோஷம் எழுந்தது. பகவான் ஸ்ரீராமகிருஷ் ணர், தூய அன்னையார்; சுவாமி விவேகானந் தர் ஆகிய இந்த மும்மூர்த்திகள் வாழ்ந்த புண்ணிய இடங்களைத் தரிசித்து ஆத்மிக பலம் பெறப்போகும் எண்ணமே எங்களை ஒரு குதூ கலத்தில் ஆழ்த்தியது; கோஷங்களை எழுப் பியது.

ஓடும் வண்டியில் எங்கள் பஜனை நடந்தது. பஜனைப் பாடல்களுக்குப் பக்கவாத்தியமாகப் புல்லாங்குழல் வாசிக்க எங்களில் ஒருத்தி இருந் ததனுல் மிக்க ரம்மியமாக அமைந்தது. நாள் தோறும் காலையிலும் மாலையிலும் கூட்டு இறை வணக்கம் செய்வது எங்களுக்கு இன்பமாக இருந்தது; உற்சாகமும் கூடிற்று.

ரெயில்வண்டியில் உட்காரவும் படுக்கவும் உண்ணவும் ஏற்ற வசதிகளை முன்கூட்டிச் செய்த படியால் முதல்நாள் பொழுது இனிதாக முடிந் தது. வழியில் நாகப்பூரில் நண்பர் ஒருவர் எங்களைச் சந்தித்துக் காலை உணவு அளித்தார். மதியம் ஒரு மணிக்கெல்லாம் இடார்ஸி என்ற

சந்திப்புநிலையத்தைச் சென்றடைந்தோம். அலகாபாத் என்ற ஊருக்குத்தான் பிரயாகை என்று பெயர். பிரயாகை போவதற்கு இடார்ஸியில் இறங்கி வண்டி மாற வேண்டும். அந்த வண்டி இரவு 8 மணிக்குத்தான் புறப்படும். ஆகவே ரெயில்நிலையத்திலுள்ள மகளிர் ஓய்வு அறையில் தங்கி உணவும் ஓய்வும் கொண்ட போதுதான் வடநாட்டுக் கோடைவெயிலின் கடுமையை உணர முடிந்தது.

**சோதனையும் சாதனையும்**

அடுத்த வண்டிக்கு ஆறுமணி நேரம் இருந்ததனால் அந்த நேரத்தில் நர்மதையின் தரிசனம் கொள்ள எண்ணமுண்டாயிற்று. இடார்ஸியிலிருந்து 13 கிலோமீட்டர் தூரத்தில் நர்மதை பிரவகிக்கிறாள். புண்ணிய தீர்த்தங்களில் நர்மதையும் ஒன்று. ''கங்கே ச யமுநே சைவ கோதாவரி ஸரஸ்வதி | நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மிந் ஸந்நிதிம் குரு ॥'' என்று நம் பூஜைகளில் தீர்த்தங்களை ஆவாஹனம் செய்தல்லவா பூஜிக்கிறோம்? ஏழு புண்ணிய நதிகளில் நர்மதையும் ஒன்று; முக்கியமானது. ஆகவே பஸ்ஸில் சென்று தீர்த்தமாடி அங்கே தீர்த்தக்கரையிலுள்ள ஸ்ரீஆஞ்ஜநேயரையும் இதரமூர்த்திகளையும் தரிசித்தோம். பஸ்நிலையம் அடைந்தபோது எங்களுக்கு ஒரு சோதனை ஏற்பட்டது. அப்போது புறப்பட இருந்த கூட்டத்தின் நெரிசலில் எங்களுக்கு இடம் கிடைக்கவில்லை. அடுத்த பஸ் வந்தபோது அதிலும் ஏகக்கூட்டம். அப்போது ஓர் ஆசாமி, ''அடுத்த பஸ்ஸில் வெகு சௌகரியமாகப் போகலாம்; இதில் போகாதீர்கள்'' என்றான். அங்கே இருந்தவர்கள் பேசும் இந்தியை அரைகுறையாகப் புரிந்துகொண்ட நாங்கள் அதுதான் கடைசிப் பஸ் என்பதை உணர்ந்து முட்டி மோதிக்கொண்டு பஸ்ஸில் ஏறிவிட்டோம்.

எங்களுக்கு 'அடுத்த பஸ்' யுக்தி சொன்ன ஆசாமி எங்களை அங்கே இரவு தங்கிவிடும்படிச் செய்ய முயன்றான் என்பது, பிறகு எங்களுக்கு நன்றாக விளங்கியது. நாங்கள் ஏறிய பஸ்ஸை இழந்திருந்தால் இடார்ஸி போய்ச் சேர்ந்திருக்க மாட்டோம். வேறு வாகன வசதியும் கிடையாது. 13 கி.மீ தூரம் நடக்க முடியுமா? அங்கேயே தங்கும்படி ஆகியிருந்தால் என்ன நேர்ந்திருக்குமோ! ஸ்ரீகுருதேவர் அருபமாக உடனிருந்து காப்பாற்றினார். அந்த அண்ணலின் கருணையை எண்ணி வியந்து வியந்து உள்ளத்தில் பூரிப்பை அடைந்தோம். நாம் செய்தது ஒரு சாதனையா? அண்ணலின் அருட் சோதனையே அது!

இடார்ஸியில் இரவு 8 மணிக்கு வந்த வண்டியில் கூட்டம் அதிகமாக இருந்தபடியால், ரெயில்நிலையத்தாரின் நல்லுரைப்படி காத்திருந்து இரவு 1-30 மணி வண்டியில் பயணமானோம். படுக்கவும் வசதி வாய்த்தது. இந்த வசதி கிடைப்பதற்கு ஒரு போர்ட்டர் உதவினான். அவனை மனத்தால் வாழ்த்தி நன்றியுணர்வோடு அவனுக்கு உரிய பணத்தையும் அளித்தோம். இறைவன் எவர் மூலமாகவேனும் உதவுவான் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

ரெயிலிலேயே 10-ஆம் தேதி பொழுது விடிந்தது. பஜனையும் பாட்டும் பிரார்த்தனையும் முடிந்ததும், சிற்றுண்டிகள் கொண்ட பின்பு, பகல் 1-30 மணிக்குப் பிரயாகை என்ற அலகாபாத்தைச் சென்றடைந்தோம்.

நாங்கள் அலகாபாத் சென்றடையும் நாளைக் குறித்து முன்னதாகவே ஸ்ரீராமகிருஷ்ண ஆசிரமத் தலைவருக்கு எழுதியிருந்தோம். ஆனால், தெய்வாதீனமாக, குறிப்பிட்ட நாளுக்கு முன்னதாகவே நாங்கள் அலகாபாத் சென்றதனால் எங்களை எதிர்பார்த்து யாரும் ரெயில் நிலையத்திற்கு வரவில்லை. ஆகவே எங்கள் உடைமைகளையும் மற்றவர்களையும் அங்கேயே இருத்திவிட்டு, தலைமை ஆசிரியை ஸ்ரீமதி ராஜம்மாளும் நானும் ஆசிரமத்திற்குப் போக வேண்டியதாயிற்று. தொலைபேசிகள் பேச மறுத்துவிட்டன! தமிழ்நாட்டைச் சேர்ந்த ராணுவப் பணியாளர் ஒருவர் வழிகாட்ட, நாங்கள் இருவரும் ஸ்ரீராமகிருஷ்ண ஆச்ரமத்தைச் சென்றடைந்தோம்.

அங்கிருந்த சுவாமிஜி எங்களுக்கு வேண்டிய உபசாரம் செய்தார். எங்களுக்காக ரெயில் நிலையத்துக்கு அருகில் வசதி மிக்க அறைகளை ஏற்பாடு செய்திருப்பதாக அறிவித்தார். பின்பு சுவாமிஜியின் ஏற்பாட்டின்படி நாங்கள் அறைகளுக்குச் சென்று ஓய்வெடுத்தோம். மாலையில் எல்லோருமாக ஸ்ரீராமகிருஷ்ண ஆசிரமம் சென்று, ஆரதியிலும் அன்று நடந்த ஏகாதசி ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனத்திலும் கலந்து கொண்டோம். இரவு 8 மணிக்கு எங்கள்

இருப்பிடம் வந்தடைந்தோம். அங்கே சுவாமிஜியின் ஏற்பாட்டின்படி, தென்னிந்திய உணவு எங்களை வரவேற்று நிறைவுறச் செய்தது.

**திரிவேணி சங்கமம்**

வேணி என்றால் சடை என்று பொருள். திரிவேணி என்றால் மூன்றும் ஒன்றாகப் பின்னப்பட்டது என்பதாம். இந்தச் சங்கமத்தில் கங்கை, யமுனை, சரஸ்வதி—இம் மூன்று நதிகளும் ஒன்றுசேருகின்றன. அந்தக் காட்சி மிகவும் அற்புதமாக உள்ளது. மகாதேவனின் நிறம் கொண்ட கங்கையும், மகாவிஷ்ணுவின் நிறம் கொண்ட யமுனையும், அந்தர்வாஹினியாகச் சேரும் சரஸ்வதியும் இணைந்து சுழன்று ஓடும் காட்சி கண்ணுக்குப் பெருவிருந்தாக இருப்பதோடு, கருத்திலும் ஒரு திரிவேணி உதயமாயிற்று! கர்ஜித்துக் குதித்துக்கொண்டு வருகிறவள் கங்கை! அதுபோலவே வேதாந்த கர்ஜனை செய்து வந்தவர் சுவாமி விவேகானந்தர். அமைதியாக ஆழமாக உள்ளவள் யமுனை; அவளைப் பரமஹம்ஸருக்கு ஒப்பிடலாம். அந்தர்வாஹினியாகக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து வந்து சங்கமிக்கும் சரஸ்வதி போன்றவர் நம் தூய அன்னையார் ஸ்ரீசாரதா தேவியார். இந்த மூன்று மூர்த்திகளின் சங்கமமும் திரிவேணி சங்கமமாக உள்ளது என்ற எண்ணம் கருத்தை நிறைத்தபோது, புறக் காட்சியும் அகக் காட்சியும் உள்ளத்திற்கு உயர்வையும் உவகையையும் அளிப்பனவாக அமைந்தன. இந்தச் சங்கமத்தைத் தரிசித்தோம்.

இந்தப் புனிதமான திரிவேணி சங்கமத்தைத்தான் பிரயாகை என்று ஆன்றோர் கூறினர். ஆழம் அதிகமில்லாமல் ஸ்நானத்திற்கு உரிய ஓர் இடம் உள்ளது. கண்ட இடத்திற்குப் போனால் ஆபத்து உண்டாகும். 'தீர்த்த மாட' என்று உள்ள இடத்திலே அபாயம் ஏதும் இல்லை. அங்கே நூற்றுக் கணக்கானவர் இமயம் முதல் குமரி வரையுள்ள பல இடங்களிலிருந்து வந்தவர்கள், புரோகிதர்களால் சங்கற்பம் செய்துகொண்டு மூழ்கி மூழ்கிப் புனித ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்கள். நாங்களும் அவ்வாறே சங்கற்பம் செய்து திருப்தி ஏற்படும்வரையில் முங்கி மூழ்கி நீராடினோம்; முழுகத் தெரியாதவர்களையும் மூழ்கச் செய்து நீராட்டினோம். பகீரதன் பெருமுயற்சி செய்து மண்ணுலகத்துக்கு அழைத்து வந்தபோது அட்டகாசம் செய்த கங்கையை நாங்கள் சிறுசிறு செப்புச் செம்புகளிலும் புட்டிகளிலும் அடைத்து மூடிக்கொண்டு வந்தோம்! பந்துக்களுக்கும் நண்பர்களுக்கும் கொடுக்கவே கொண்டுவந்த அந்தக் கங்கை பலரைப் புனிதப்படுத்தித் தூய உணர்வு அளித்தாள் என்று சொல்லவும் வேண்டுமா!

பிரயாகையில் ஆஞ்சநேயர் கோயிலும், பரத்வாஜர் ஆசிரமமும் தரிசிக்கத்தக்கவை. அலகாபாத்தில் நேரு குடும்பத்தினர் வாழ்ந்த 'ஆனந்த பவன்' இப்போது தேசத்திற்கே உரிய—பாரதத்திற்கே 'பவன்' ஆகிவிட்டது. அங்கேதான் எத்தனை அழகிய விதம்விதமான செடிகொடி நிறைந்த பூங்கா! தாமரைத் தடாகங்கள், தோட்டம், புல்வெளி ஆகியவற்றைக் கண்டு நாங்கள் மலைத்துப் போனோம். அது உண்மையில் ஆனந்த பவனமே.

**ஸ்ரீமத் சுவாமி விஜ்ஞானானந்தர்**

மாலையில் ஆசிரமம் சென்று, தரிசித்துக் கொண்டபின்பு அந்த ஆசிரமத்தை உண்டாக்கிய ஸ்ரீமத் விஜ்ஞானானந்தஜி மகராஜ் அவர்களைப்பற்றி மடத்து சுவாமிஜி விரிவாகக் கூறக் கேட்டோம். ஸ்ரீராமகிருஷ்ணருடைய நேர்ச் சீடர்களில் ஒருவர் ஸ்ரீ சுவாமி விஜ்ஞானானந்தர். அவர் பலகாலம் அலகாபாத்தில் தங்கித் தவமிருந்து இந்த ஆசிரமத்தை உண்டாக்கினார். சுவாமி விவேகானந்தரின் உட்கருத்தை ஆய்ந்து உணர்ந்து, தற்போது பேலூர் மடத்தில் துலங்கும் மாபெரும் கோயிலுக்கு வரைபடம் வரைந்த எஞ்சினீயர் ஆவர். அந்தத் திருக்கோயிலில் ஸ்ரீராமகிருஷ்ணரின் மூர்த்திப் பிரதிஷ்டை செய்தவரும் ஸ்ரீமத் விஜ்ஞானானந்த சுவாமிகளே. அவரைப்பற்றிய சுவாரஸ்யமான திவ்ய சரிதத்தைக் கேட்டு மனம் நிறைந்தோம்.

மறுநாள், 12-ஆம் தேதி காலையில் மடத்துத் தொண்டர்களின் உதவியால் ரெயிலேறி வாராணசிக்குப் பயணமானோம். போகும்போது ஒரு பாலத்தை வண்டி தாண்டும் பொழுது மறுபடியும் அந்தத் திரிவேணிசங்கம தரிசனமும் அதன் கம்பீரமான தோற்றமும் எங்களுக்கு உவகையையூட்டின. மேகமூட்டத்துடன் இருந்த வானம் வெயிலைக் குறைத்த தோடல்லாமல் மழையையும் பொழிந்தது. சூடு தாக்காமல் எங்களைக் காத்த சந்திரசூடனைக் காண, பகல் ஒரு மணிக்கெல்லாம் காசியைச் சென்றடைந்தோம்.

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பொன்மொழிகள்

1. கடவுளிடம் பக்தி இல்லாத காரணத்தால்தான் மனிதன் பலவிதமான துன்பங்களுக்கு ஆளாகிறன்.

இரவில் ஆகாயத்தில் பல நட்சத்திரங்களை நீ பார்க்கிருய். ஆனல் சூரியன் உதித்ததும் அவைகள் தென்படுவதில்லை. ஆகையால் பகலில் ஆகாயத்தில் நட்சத்திரங்களே கிடையாது என்று சொல்ல முடியுமா? மனிதனே! உனது அஞ்ஞான காலத்தில் நீ ஈசுவரனைக் காண முடியாததால், ஈசுவரனே இல்லை என்று சாதிக்காதே.

2. பெறுதற்கரிய இம் மானிடப் பிறவியைப் பெற்றவன் இப் பிறவியிலேயே இறைவனை அறிய முயலாமல் போனல், அவன் வீணில் பிறந்தவனே ஆவான்.

3. ஒரு மனிதனுடைய எண்ணத்திற்கும் நோக்கத்திற்கும் தக்கபடியே அவனுக்கு வெகுமதி கிடைக்கிறது. இறைவன் பக்தர்கள் விரும்புபவைகளை எல்லாம் கொடுக்கும் கற்பக மரம் போன்றவன்.

ஓர் ஏழை மனிதனுடைய மகன் கல்வி கற்று, சிரமப்பட்டு உயர்நீதிமன்றத்தில் நீதிபதி ஆகிறன். உடனே அவன், ''இப்போது நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். சமுதாயத்தில் உயர்ந்த பதவியை அடைந்துவிட்டேன். இப்போது எனக்கு எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது'' என்று நினைக்கிறன்.

அவனுக்குப் பகவான் அப்போது, ''நீ இந்த நிலைமையிலேயே இருப்பாயாக'' என்று சொல்கிறர்.

ஆனல் அதே நீதிபதி உபகாரச் சம்பளம் பெற்று வேலையை விட்டு நீங்கும்போது, தனது கடந்த கால வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கிறன். அப்போது தனது வாழ்நாட்கள் வீணகப் போயிருக்கின்றன என்ற உண்மை அவனுக்குப் புரிகிறது. அந்நிலையில் அவன் துன்பத்துடன், ''ஐயோ! நான் என்னுடைய வாழ்நாளில் சாதித்தது என்ன!'' என்று நினைத்து புலம்புகிறன்.

அப்போது பகவானும் அவனிடம், ''ஆம், நீ ஒன்றுமே சாதிக்கவில்லைதான்!'' என்று சொல்கிறர்.

4. முதலில் கடவுளைத் தேடி, பிறகு உலகப் பொருள்களைத் தேடு. இதற்கு மாருகச் செய்யாதே. ஆத்மஞானத்தை அடைந்த பிறகு நீ உலக வாழ்க்கையில் ஈடுபட்டால் உனக்கு மனச் சஞ்சலமே இராது.

5. சமூகச் சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசுகிருயா? நல்லது. கடவுளைக் கண்ட பிறகு வேண்டுமானல் நீ அதைச் செய்யலாம்.

பழைய காலத்து ரிஷிகள் கடவுளைக் காண்பதற்காக உலகத்தையே துறந்திருக்கிறர்கள். என்பதை மறக்க வேண்டாம். இது ஒன்றே ஒன்றுதான் அவசியம் தேவைப்படுவது. மற்ற எல்லா விஷயங்களும் நீ விரும்பினல் உன்னை வந்தடையும்.

ஆகவே முதலில் கடவுளைப் பார். கடவுளைத் தரிசனம் செய். பிறகு சமூகச் சீர்திருத்தம், சொற்பொழிவுகள் ஆகியவைகளைப்பற்றிப் பேசிக்கொள்ளலாம்.

# பரமார்த்தப் பிரசங்கம்

**ஸ்ரீமத் சுவாமி விரஜானந்தர்**

244. மனிதப் பிறவியின் முக்கிய நோக்கம் யாதெனில், இறைவனை அடைந்து மோட்சத்தைப் பெறுவதுதான். இந்த உயர்ந்த புருஷார்த்தத்தை அடைவதற்கான அதிகாரமும் சாமர்த்தியமும் மனிதருக்கு மட்டுமே உண்டு; மிருகங்களுக்கோ தேவர்களுக்கோ கந்தர்வர்களுக்கோ இல்லை. மிருகங்களுக்கு இந்த வாய்ப்புக்கு வழியில்லை; ஏனெனில், அவற்றுக்கு விவேகபுத்தி கிடையாது. நித்தியம் எது, அநித்தியம் எது என்ற பகுத்தறிவு கிடையாது. தேவர்களுக்கும் மோட்ச வாய்ப்பு இல்லை என்பதற்குக் காரணம், அவர்கள் அபரிமிதமான தேவலோக இன்பத்திலும் சம்பத்திலும் தொடர்ந்து மூழ்கியிருப்பவர்கள். விவேகத்தையும் வைராக்கியத்தையும் வளர்த்துக்கொள்ள அவர்களுக்கு நேரமேது? இதே காரணத்தால் மக்களுள்ளும் யாருக்கு நிறைந்த செல்வமும் ஏராளமான சம்பத்தும் சொந்தமாகியுள்ளனவோ அவர்களுக்கும் மோட்சம் கிட்டுவது கடினமேயாம். மேலும், யார் மிகுந்த வறுமையில் சிக்குண்டுள்ளனரோ, வாழ்க்கை வசதிகளே இல்லாதவரோ, எப்பொழுதும் அல்லலுற்றுக் கவலையில் கட்டுண்டு தவிப்பவர்களோ, பசியால் வாட்டப்படுகிறவர்களோ, இல்லாமையினால் உபாதையுறுகிறவர்களோ—அவர்களுக்கும் தர்மநெறியில் இறங்குவது மிகக் கடினமான காரியமாம். சுமாரான வசதிகள் பொருந்தியுள்ளவருக்கே இறைவனை அடைவது மிகவும் எளிதாகும். ஏனெனில், அவர்கள் அந்த ஓரத்திலும் இல்லாமல் இந்த ஓரத்திலும் இல்லாமல் நடுநிலையில் உள்ளனர். உலக சரித்திரம் நமக்கு ஒரு தத்துவத்தைக் காட்டுகிறது— அறத்துறை, சமுதாயப்போக்கு, அரசியல் இயக்கம் ஆகிய எந்தப் பகுதியிலும் சரி, வாழ்வின் வேறு பல தொழில்நிலைகளிலும் சரி, சிந்தனையுலகிலும் சரி, தம்முடைய மகா மேதையினால், பேரறிவினால், அழியாத சின்னங்களைப் பொறித்துவிட்டுப் போயுள்ள மகான்களிற் பெரும்பாலோர் நடுத்தர வகுப்புகளைச் சார்ந்த, சாதாரண வசதிகளையே பெற்றிருந்த, அதிக தனவசதியும் கொடிய வறுமையும் இல்லாத, சாமானியப் பெற்றோர்களுக்கே பிறந்தவர்களாவர்.

* * *

245. இன்றைத் தினம் நாம் நம்முடைய சக்திகளைச் சிதறவிட்டுக் கொண்டு, நாளைத் தினம் என்ன வருமோ என்பதுபற்றி நமக்குள்ளே சச்சரவிட்டுக்கொண்டு இருப்போமேயானால், இன்று கிடைக்கக்கூடியதையும் இழப்போம், நாளை கிடைக்கக்கூடியதையும் இழப்போம்.

* * *

246. வித்தை, புத்தி, சாஸ்திரஞானம், தர்க்கம், வாதத்திறன், ஆழ்ந்த ஆலோசனைச் சக்தி, செல்வம், தானம், புண்ணிய கர்மங்கள், கிரியைகள், யாகச் சடங்குகள், யோகமும் தவமும்கூட—இவற்றுள் எவற்றாலுமோ, இவை யாவற்றையும் ஒன்று கூட்டுவதாலும்கூடவோ, இறைவனை அறிந்து உணர்ந்துவிட முடியாது. இவற்றுள் எந்த ஒன்றாலுமோ அனைத்தினாலுமோ ஆண்டவன் தன்னைப் பற்றவிடுமாறு செய்துகொள்வதில்லை, தெரிந்துகொள்ளுமாறு பண்ணிக்கொண்டுவிடுவதில்லை. அவரை அறியவோ வசப்படுத்தவோ உதவும் ஒரே பிரம்மாஸ்திரம் பிரேமை என்னும் தூய அன்பு, பக்தி என்னும் முழு உள்ளப்பற்று — இதுவேயாம். அவர் அநிர்வசனீயமான பிரேமை சொரூபி—விவரித்தற்கரிய அன்புமயமானவர் என்று பக்திசூத்திரம் கூறும். அந்த வீணைத் தந்தியை மீட்டுவாயானால், ஆண்டவனுடைய சொரூபம் பிரகாசமாகும். அவரால் இனியும் தம்மை மறைத்திருக்க முடியாது. பசுவின் மடியைக் கன்று தன் தலையால் முட்டியவுடனே கறவைப் பசு பாலைப் பொழிந்து தள்ளுகிறது அல்லவா, அதைப் போலவேதான் ஆண்டவனது இயல்பும்.

* * *

247. பரமேசுவரரைப் பற்றி வேதம் உரைப்பது இதுவாம்:—அவர் எல்லாக் குணங்களையும்

கடந்திருப்பவர். நாமம் ரூபம் தேசம் காலம் நிமித்தம் ஆகிய வரைகள் அற்றவர். வாக்கு மனம் புத்தி இவற்ருல் அடைய முடியாதவர். எங்கும் நிறைபவர். அநாதியானவர். அனந்த மானவர். நினைத்தற்கரிய தன்மை வாய்ந்தவர் என்றவாறெல்லாம் மறை உரைக்கிறது. ஆனுல் இந்தச் சிறப்புக்களையெல்லாம் ஏற்றுத் தயக்க முற்றுத் தடைப்பட்டு விடுவதற்குப் பக்தனு டைய உள்ளம் இணங்கிவிடுவதேயில்லை. அவ் வாறு இணங்கவும் முடியாது அதனுல். பக்தன் சொல்லுவது என்னவென்ருல், ''பரமேசுவரர் மேலே கூறியதெல்லாம் மட்டுமே ஆவாராஞல் அவர் இருந்தென்ன, இல்லாமற் போனுல்தான் என்ன? நான் அவரைக் காண்பதுகூட முடியா தாயின்—அவரை எனக்கு உரியவராக நான் செய்துகொள்ள முடியாதாயின் — அவரால் எனக்கு என்ன பயன் உளது? இதுவே என் நிலை யாகுமானுல் எல்லா அறப்பயிற்சிகளும், சமயச் சடங்குகளும் வீணேயாம். நானே வீண்தான். இந்த மானிட வாழ்வும் வீண்தான். வாழ்ந் திருப்பதிலே என்னதான் குறிக்கோள் உள்ளது? எவ்வாற்ருலும் இந்த ஜன்மத்திலேயே நான் அவரைச் சாட்சாத்கரித்துவிட வேண்டும்'' என்று பக்தன் சொல்லி முயற்சி செய்கிருன். பக்தனுடைய உள்ளம் கசிந்து உருகிக் கதறிப் புலம்பும்பொழுது ஆண்டவனுடைய ஆசனத் தையே அது குலுக்குகிறது. அதற்கு மேலும் இறைவன் உள்ளம் உருகாமல், தம் மகா மகிமையில் ஆழ்ந்து தனித்து வீற்றிருப்பது முடியாத காரியமாகிறது. அவர் உண்மையில் எல்லாம் அறிந்தவர், எல்லா உயிர்களினுடை யவுமான அந்தராத்மா, சர்வத்திலும் அந்தர் யாமியாக உள்ளவர், காரணமின்றியே பெருகி வழியும் கிருபைக் கடல், யாவற்றுக்கும் மேலாக, பக்தவத்ஸலராக இருப்பவர். ஆதலால் பக்தனுடைய மன அபிலாஷையைப் பூர்த்தி பண்ணுவதற்காக அவர் தம்முடைய நிஜ சொரூபத்தை மறைத்துக்கொண்டு, பக்தன் விரும்பும் உருவத்தில் அவனுடைய உள்ளக் கோயிலில் காட்சிதந்து அவனைக் கிருதார்த்த ஞக்குகிருர். பக்தனுடைய வாழ்க்கையின் நோக்கம் பூர்த்தியாகிறது. மேலும், மக்கள் இறைச் சொரூபத்தை எளிதாக உணரும் பொருட்டு ஆண்டவன் இடையிடையே மனித வடிவம் ஏற்றுப் புவிமீது இறங்கி வருகிருர். ஆண்டவன் இவ்வாறு அவதாரரூபத்தில் மாந்த ரிடையே வாழும்பொழுது, பாவம் புரிவோ ரும் தாபப்படுவோருங்கூடத் தவச் சாதனை இல்லாமலே அவருடைய கிருபை காரணமா கவே உய்விக்கப்படுகின்றனர்.

* * *



# மதிப்புரை

**கௌதம புத்தர் வரலாறு**: ஆசிரியர்: திரு அ. லெ. நடராஜன்; பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1; பக்கங்கள் xx+320. விலை ரூ. 10.

புத்தர்பிரான் பாரதத்தாயின் தவப்புதல் வர். பாரதமக்கள் அவரைத் தசாவதாரங் களுள் ஒருவராகப் போற்றி வருகின்றனர். அவ ருடைய வாழ்வும் போதனையும் உலகத்து மக்களை உய்வுறச் செய்யும் ஒரு பெரும் ஆக்கச்சக்தியாக 25 நூற்ருண்டுகளாகப் பணி யாற்றி வந்துள்ளன. பிரபஞ்ச வானிலே ஒளி விட்டுப் பிரகாசிக்கும் சமயச் சான்ருேர்களுள் ஒருவரான சாக்கிய முனி, ஆயிரக்கணக்கான ஆடவர் மகளிரைக் கவர்ந்து, இன்றும் ஓர் அருட்சோதியாக இருந்து, காலம், நாடு, இனம் முதலான வரம்புகளையெல்லாம் மீறி நின்று, தர்மசக்கரப் பிரவர்த்தனம் செய்து வருகின்ருர். மன்னுதிமன்னர் நிறுவிய அரசுகள் பல, மண்ணைக் கவ்விப் பூண்டற்றுப் போய் விட்டன. ஆனுல் கிருஷ்ணரும் புத்தரும் ஏசு வும் முகம்மதுவும் சிரஞ்சீவிகளாகவே இருந்து வருவது ஓர் அற்புதமான, சரித்திர வரலாறு.

புத்ததேவருடைய வாழ்க்கையை விரிவாகத் தெரிந்துகொள்ளுவது ஒவ்வோர் இந்தியனு டைய புனிதக் கடமை. தமிழகத்துக்குப் பௌத்த சமயத்துடன் நீண்ட தொடர்பு உண்டு. திரு அ. லெ. நடராஜன் எளிய தமிழ் நடையில், சுவை நிறைந்த போக்கில்,

விரிவான முறையில், புத்ததேவருடைய ஜீவிய சரித்தையும் அவருடைய உபதேசங்களையும் தெள்ளத் தெளிய நூல்வடிவத்தில் தொகுத்துத் தந்திருப்பதற்காகத் தமிழ்மக்கள் அவருக்கு என்றுமே கடமைப்பட்டிருப்பார்கள் என்பதில் ஐயமேயில்லை. பிற இந்திய மொழிகளிலும் இந்த நூல் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்தால் அதனுல் நாட்டுநலம் மிகப் பெருகும்.

நூலுக்கு அழகான அணிந்துரை அளித்துள்ளார் சென்னை மகாபோதிக் கழகத்தின் நெறியாளரும், தென்னிந்திய பௌத்த சங்கத்தின் தலைவருமான டாக்டர் ஈ. நந்தீசுவர நாயக தேரோ.

பாரதத்தின் இக்கால அறமலர்ச்சிக்கு அடிகோலிய சுவாமி விவேகானந்தர் புத்தர்பிரானிடம் ஆழ்ந்த பற்றும் குன்றாத விசுவாசமும் கொண்டவர். அவர் புத்தருடைய சிறப்பை விளக்கி மொழிந்த சில உரைகள் நூலுக்கு முற்பகுதியாகத் தரப்பட்டுள்ளன. நூலின் தரத்தை இவ்வுரைகள் மேன்மைப்படுத்த உதவுகின்றன.

நூலின் முதற் பகுதியில் புத்தருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் எட்டு அதிகாரங்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளன. புத்தருடன் தொடர்பு பெற்றுப் புனிதர்களான பல்லோருடைய வரலாறுகள் படிப்பதற்கு ரசமாக உள்ளன. அவ்வாறே அவருடைய சங்க மகிமையால் பெரும்பேறு பெற்ற மாதர்திலகங்களைப் பற்றிய குறிப்புக்களும் வெகு நேர்த்தியாக அமைந்துள்ளன. புத்தருடைய பேருள்ளமும் பெருங் கருணையும் படிப்போர் உள்ளத்தை நிறைக்கும் முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. பௌத்த தர்மமும் பௌத்த சங்கமும் இரண்டு தனித்தனி அதிகாரங்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

நூலாசிரியர் தமது நன்முயற்சியைச் செவ்வனே ஆற்றித் தமிழ்மக்களின் நன்றிக்கு உரியவராயுள்ளார். இந்த நூல் இல்லம்தோறும் பள்ளிதோறும் படிப்பகங்களிலும் சிறப்பிடம் பெற வேண்டிய நல்ல ஏடு.

—ரா.வி.

**அரங்கம் முதலான ஆற்றங்கரையிலே:** ஆசிரியர்: டாக்டர் ஜி. டி. கோபால கிருஷ்ண நாயுடு; மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயம்புத்தூர்-1. பக்கங்கள் 80. விலை ரு. 3.

செம்மையாக அமைந்துள்ள இந்தச் சிறு நூல் சமயத்துறையில் ஈடுபாடுள்ள பக்தர்களுக்கும், பூகோளப் பாடத்தில் கவனம் கொள்ளும் மாணவருக்கும், புனிதத் தமிழிலக்கியத்தில் ரமிக்கும் கல்விமான்களுக்கும் இன்பமூட்டும் எழுத்தோவியமாக விளங்குகிறது. ஆசிரியரின் இறையன்பும், கவிதைப் பற்றும், எழுத்து வன்மையும் நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் காண்கின்றன. காவேரியே தமிழகத்தின் ஜீவநாடி. தமிழகம் ஆன்மவளம் பெற உதவிய பெரியோர் பலரும் நதிநாகரிகத்தில் தோய்ந்து பரவசமுற்றவரேயாவர். இந்த நூலைப் படிப்பது ஒரு மானசிகமான காவேரிப் புண்ணிய யாத்திரையின் உவகையை அளிக்க வல்லது. ஆங்காங்கே பொதிந்துள்ள பல கவிதை மேற்கோள்கள் மிகப் பொருத்தமாக அமைந்து, நூலுக்கு அழகு செய்கின்றன. நல்லோர் சிலர் நூலைப் பாராட்டி அணிந்துரைகள் அளித்துள்ளனர். வழிபாட்டுக்கு உரிய தமிழன்னைக்கு இந்த நூல் மணம் கமழும் மாலை போல்வது. டாக்டர் நாயுடு அவர்களின் இந்தப் பணி—சமயப் பணி, இலக்கியப் பணி, மக்கள் பணி ஆகிய முப்பெருமைகளும் கொண்டுள்ளது. மாணவமணிகளும் மாதர் திலகங்களும் நாட்டுப்பற்றுள்ள புருஷசிகாமணிகளும் நூலைப் படித்து நற்பயன் பெறுவார்களாக. டாக்டர் நாயுடு இந்தத் துறையில் மேன்மேலும் உழைத்துப் புத்தகங்கள் பல வரைவாராக.

—ரா.வி.

நூற்பெயர்: பண்பாட்டின் அடிச்சுவடு
விலை ரூ: 5-00.
கிடைக்கும் இடம்: புத்தொளிப் பதிப்பகம்,
32, சாமிநாயக்கன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை-600 002.

'பண்பாட்டின் அடிச்சுவடு' என்ற தொகுப்பு நூல் தெய்வபக்தி, தேசபக்தி, இலக்கியம், சமயம், அறிவியல், பொதுத்தொண்டு என்று இவை போன்ற அனைத்துப் பண்புகளையும் செய்திகளையும் அடக்கிய ஒரு பன்மணிச் சுரங்கமாகத் திகழ்கின்றது. பள்ளிச் சிறுவர்கள், கல்லூரி மாணவர்கள், சமய சமூகத் தொண்டர்கள், சொற்பொழிவாளர்கள், வினுடி வினு நிகழ்த்துவோர், கட்டுரையாளர்கள் ஆகிய அனைவரும் அவ்வப்போது தமக்கு வேண்டிய

கருத்துக்களையும் செய்திகளையும் எளிதில் பெறுவதற்குரிய ஒரு கலைக்களஞ்சியமாக மிளிர்கின்றது. நமது பாரதப் பண்போடு நில்லாமல் உலக நாடுகளில் நிகழ்ந்த பல்வகைச் செய்திகளையும் இந்நூலிற் காணும் வாய்ப்புக் கிட்டுகின்றது. இந்நூலில் உ. வே. சாமிநாதய்யரின் குருவாக மகாவித்துவான் தியாகராசச்செட்டியார் எனக் கூறியிருப்பதும் [பக்கம் 233], தேசபந்து சித்தரஞ்சனதாஸரை ரெயிலில் பிரயாணம் செய்யும்போது ஓர் ஆங்கிலமாது திருமணம் செய்துகொள்ள வற்புறுத்தியதாக [பக்கம் 213-214] வெளியிட்டுள்ள செய்தியும் உண்மைக்குப் புறம்பானவை.

நூலைப் பயன்படுத்துவோர் வேண்டிய செய்தியை எளிதில் பார்த்துக் கொள்வதற்கேற்பப் பண்பாளர்கள் பட்டியல், பண்புகள் பட்டியல், நூல்கள் பட்டியல் என மூன்றுவகையாகப் பிரித்து நூலின் இறுதியில் பட்டியல்கள் கொடுக்கப்பெற்றுள்ளன.

இது போன்ற நூல் தமிழகத்தில் இதுவே முதல் எனலாம். பல்வேறு செய்திகளைத் தெரிந்துகொள்வதற்கு எத்தனையோ நூல்கள் படிக்காமலே இந்த ஒரு நூலைப் படித்துத் தெரிந்துகொள்ளலாம். எல்லா நூலகங்களிலும், எல்லா இல்லங்களிலும் இடம்பெற வேண்டிய அறிவுச் சுடர். —ப. இராமன்



# செய்திகள்

## ஸ்ரீ சாரதாதேவியாரின் ஜெயந்தி விழா

1976 டிசம்பர் 13 ஆம் நாள் திங்கட்கிழமையன்று தூய அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரின் 124 ஆம் ஜன்ம திதிபூஜை வழக்கம் போல மயிலை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. விடியற்காலை முதற்கொண்டு நடுப்பகல் வரையிலும் தியானம், பஜனை, பூஜை, பாராயணம், ஹோமம் முதலியன விமரிசையாக நடந்தேறின.

மாலை ஆரதிக்குப் பிறகு மடத்தில் கூடியிருந்த பக்தர்களுக்கு சுவாமி சர்வக்ஞானந்தர் தமிழிலும், சுவாமி தபஸ்யானந்தர் ஆங்கிலத்திலும் ஸ்ரீஸ்ரீ அன்னையாரைக் குறித்து உரையாற்றினர். சுவாமி சர்வக்ஞானந்தர் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்திற்கு ஸ்ரீஅன்னையார் ஞானத்தாயாக விளங்கி ஆற்றிய தொண்டை வலியுறுத்திப் பேசினார். ஸ்ரீகுருதேவரின் பணிக்காகவே அவதரித்தவர் ஸ்ரீ சாரதாதேவியார். கடவுளின் தாய்மைத் தன்மையை அவர் தமது வாழ்வின் மூலம் விளக்கினார். குடும்பத்தில் பல உறவினர்கள் மத்தியில் வாழ்ந்தபோதிலும், மிகவுயர்ந்த தெய்விகநிலையில் எப்போதும் இருந்து வந்தார். அவருடைய தாயன்பு நாடு, மொழி, இனம் ஆகிய குறுகிய எல்லைகளை எல்லாம் கடந்திருந்தது.

சுவாமி தபஸ்யானந்தர் தமது உரையில், பிரதிபலனை எதிர்பாராமல் எத்தகையவர்களுக்கும் ஸ்ரீ அன்னையார் கருணை மழை பொழிந்தார். தீயவர்கள், ஒழுக்கமற்றவர்கள் என்று தெரிந்திருந்தும் அவர்களை மன்னித்து தமது தாயன்பின் காரணமாகப் பலருக்கும் அவர் புகலிடம் தந்தார் என்று குறிப்பிட்டார்.

19-12-76 ஞாயிறன்று ஜெயந்தி விழாப் பொதுக்கூட்டம் விவேகானந்தர் ஹாலில்நடைபெற்றது. பிற்பகல் 3-30 முதல் 5-30 வரை ஸ்ரீ சாரதா பஜனை மண்டலியைச் சேர்ந்த மாதர்கள் இனிய பக்திப் பாடல்களைப் பாடினார்கள். பின்னர் ஸ்ரீஅன்னையின் ஜெயந்திவிழாவை முன்னிட்டு நடைபெற்ற இலக்கியப் போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. தமிழில் பேசிய திருமதி ராதா சதாசிவம் அவர்கள், தூய அன்னையாரின் அளவற்ற அன்பு, ஒப்பற்ற சேவை ஆகியவைகளைப் பல நிகழ்ச்சிகளின் மூலம் விளக்கிப் பேசினார்.

அடுத்து சுவாமி அமிர்தானந்தர் ஆங்கிலதில் உரையாற்றினார். அவரது உரையின் சுருக்கமாவது:- 'உங்களில் ஒருவருமே ஸ்ரீ அன்னையைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை' என் விவேகானந்தர் குறிப்பிட்டார். அன்னையி

ஆசியைப் பெற்ற பிறகே அவர் தமது மேலை நாட்டு திக்விஜயத்தை மேற்கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாதேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் தனித்தனியாகக் காட்சியளித்த போதிலும் மூவரும் அடிப்படையில் ஒரே சக்தியாக விளங்குகிறார்கள். ஆன்மிக வாழ்க்கையில் ஏற்படும் எல்லாவிதமான சந்தேகங்களுக்கும் சாதகர்கள், ஸ்ரீ அன்னையாரின் வாழ்க்கையிலிருந்தும் உபதேசங்களிலிருந்தும் பதிலையும் ஆறுதலையும் பெறலாம்.

சுவாமி தபஸ்யானந்தர் தமது முடிவுரையில் தெரிவித்த சில கருத்துக்கள் வருமாறு:- அன்னை ஸ்ரீசாரதாதேவியாரை 'அணுகிய ஒவ்வொருவரும் மன அமைதியையும் அவருடைய தெய்விகத் தாயன்பையும் உணர்ந்தனர். அவரை உண்மையிலேயே உலகம் புரிந்து கொள்வதற்கு பலகாலம் ஆகும். நஹபத்தில் கடுமையான உழைப்பு நிறைந்த வாழ்க்கைக்கு இடையிலும், ஜெபம் தியானம் போன்ற ஞான சாதனைகளை அவர் தவறாமல் கைக்கொண்டிருந்தார். அன்னையாருடைய முழுவாழ்க்கையுமே ஒரு மாபெரும் தவமாக அமைந்திருந்தது. ஆன்மிக வாழ்க்கையில் ஆழ்ந்து சென்றவர்களால் மட்டுமே ஸ்ரீ அன்னையாரைப் புரிந்துகொள்ள முடியும். தெய்விகம் அவரிடம் பரிபூரணமான அளவில் குடிகொண்டிருந்தது. என்றாலும் அவருடைய மனித இயல்புகளை மட்டுமே கவனித்துப் பார்த்தாலும்கூட, அவைளே மனித குலத்திற்குப் பெரும் படிப்பினையாக விளங்குகின்றன. ஸ்ரீ சாரதா தேவியார் பல சிக்கல்கள் நிறைந்த குடும்பச் சூழ்நிலைகளுக்கிடையிலும் துன்பங்களுக்கிடையிலும் வாழ்ந்ததாக வெளிப்பார்வைக்குத் தோன்றினாலும், தம்முள் அவர் பூரண நிறைவுடனும், எல்லையற்ற தூய அன்புடனும், மலையின் மீது மேகக் கூட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தவழ்ந்து சென்றாலும் அவைகளால் ஒருசிறிதும் பாதிக்கப்படாமல் கம்பீரமாக நிற்கும் மலையைப் போல உயர்ந்த தெய்விக நிலையில் வாழ்ந்தார். உலகில் பெரும் புகழுடன் வாழ்ந்த பலருடைய பெருமைகள் நாளடைவில் சிறிது சிறிதாகத் தேய்ந்து மறைந்து விடுகிறது. தோன்றி வளர்ந்து கொண்டே போகும் பெருமை படைத்த அபூர்வமான ஒரு சிலரில் ஸ்ரீ சாரதாதேவியாரும் ஒருவர்.

பின்னர் பஜனை கீதங்கள் பாடப்பட்டு, பிரசாத வினியோகத்துடன் விழா இனிது முடிந்தது.

## கிறிஸ்து ஜெயந்தி

1976 டிசம்பர் 24 வெள்ளிக்கிழமை முன்னிரவில் மயிலை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் கிறிஸ்து ஜெயந்தி விழா கொண்டாடப்பட்டது. கிறிஸ்தவ சமயமுறைப்படி அலங்கரிக்கப்பட்டிருந்த இயேசு கிறிஸ்துவின் திருவுருவப் படத்தின் முன்னால் பூஜையும் நைவேத்தியப்படைப்புகளும் நடந்தேறின. சுவாமி கபீரானந்தர் பைபிளிலிருந்து ஏசுவின் ஜனன வைபவத்தைக் கூறும் பகுதியையும் மலை சொற்பொழிவு பகுதியையும் விழாவிற்கு வந்திருந்த அன்பர்களுக்குப் படித்துக் காட்டினார். சுவாமி தபஸ்யானந்தர் தமது முன்னுரையில், சுவஸர்லாந்து,ஜெனிவா ஸ்ரீராமகிருஷ்ண வேதாந்த நிலையத்தைச் சேர்ந்த சுவாமி நித்தியபோதானந்தரை அறிமுகப்படுத்தினார். ஆன்ட்பூரில் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்கள் கிறிஸ்து ஜெயந்தியின் போது நிகழ்த்திய சாதனைகளை நினைவூட்டினார்.

சுவாமி நித்தியபோதானந்தர் ஆற்றியஉரையில் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் இயேசு கிறிஸ்துவுக்கும், வேதாந்த சமயத்திற்கும் கிறிஸ்தவ சமயத்திற்கும் உள்ள ஒப்புமைகளை விளக்கிப் பேசினார். மேலும் அவர் தமது உரையில், 'கடவுளின் அவதாரமாகிய இயேசுநாதர் மக்களை இரட்சிப்பதற்காகவே பரமண்டலத்திலிருந்து வந்தார். இயேசு என்னும் பெயரைப் பெற்றிருந்த அவர், கிறிஸ்து என்னும் உயர்ந்த தெய்விக நிலையில் வாழ்ந்து மக்களுக்கு வழி காட்டினார். கிறிஸ்தவ மதம், இந்து மதம் ஆகிய இரண்டில் எதைத் தாக்கிப் பேசினாலும் அது ஆண்டவனையே இகழ்வதாகும்' என்று குறிப்பிட்டார். பிரசாத வினியோகத்துடன் விழா இனிது முடிவு பெற்றது.



**பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜெயந்தி விழா, 142-ஆம் ஜன்மதிதிபூஜை 20—2—1977 ஞாயிற்றுக்கிழமை நடைபெறும்.**



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

**(16—1—77 முதல் 15—2—77 வரை)**

| | |
|---|---|
| *16-1-77 ஞாயிறு:* | **சுவாமி விவேகானந்தரின் ஜெயந்திவிழா பொதுக்கூட்டம்** |
| *மாலை 3-30 முதல் 5-30 வரை* | *உபந்யாசம்: 'ஸ்ரீ ராமானுஜ வைபவம், பிரம்மஸ்ரீ முக்கூர் லக்ஷ்மீ நரசிம்மாச்சாரியார்* |
| *மாலை 5-30 முதல் 7-30 வரை* | *சொற்பொழிவு:* **'விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும்'**<br>*தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்*<br>*பேசுவோர்: ஸ்ரீ என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார் (தமிழ்)*<br>*சுவாமி சித்திநாதானந்தர் (ஆங்கிலம்)* |
| *17-1-77 திங்கள் முதல் 21-1-77* | *வெள்ளி வரையிலும்* **ஸ்ரீமத் பாகவதம்** *சொற்பொழிவுகள்* |
| *மாலை 5-30 முதல் 6-15 வரை* | *நிகழ்த்துபவர்: சுவாமி சித்திநாதானந்தர்* |
| *23-1-77 ஞாயிறு:* | *மாலை 5 முதல் 7 மணிவரை—***கருத்தரங்கம்** |
| *பொருள்:* | *நான் பார்க்கும் விவேகானந்தர்* |
| *தலைவர்:* | *சுவாமி பராத்பரானந்தர் (அர்ஜென்டைன)* |
| *பேசுவோர்:* | *ஸ்ரீ சதுர்வேதி பத்ரிநாத்*<br>*ஸ்ரீ த. ஜெயகாந்தன் (பிரபல தமிழ் எழுத்தாளர்)*<br>*டாக்டர் சி. வி. சுப்பிரமணியம்.*<br>*பேராசிரியர் வி. கணபதி* |
| **ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனம்:** | *ஏகாதசி தினங்களில் ஆரதிக்குப் பிறகு (16, 31-1-77 & 14-2-77)* |
| **ஸத்ஸங்கம்:** *ஞாயிறுதோறும்:* | *மாலை 4 முதல் 8 மணி வரை* |
| *,, 4 முதல் 4-20* | *ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (23-1-77 & 6-2-77)*<br>*ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (30-1-77 & 13-2-77)* |
| *,, 4-20 முதல் 4-30 வரை* | *தியானம்* |
| *,, 4-30 முதல் 5-30 வரை* | *சொற்பொழிவு (தமிழ்)*<br>*ஸ்ரீமத் ராமாயணம் - Dr. N. வீழிநாதன் (30-1-77)*<br>*ஸ்ரீமத் பாகவதம் - ஸ்ரீ 'அண்ணு' சுப்ரமண்யம் (6-2-77)*<br>**கருத்தரங்கம்:** *வேதாந்த திரிவேணி (13-2-77)*<br>*தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்*<br>*அத்வைதம்: Dr. டி. எம். பி. மகாதேவன்*<br>*விசிஷ்டாத்வைதம்: பேராசிரியர் கே. சேஷாத்திரி*<br>*துவைதம்: ஸ்ரீ எஸ். எஸ். ராகவாச்சார்* |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:** | |
| *சனிக்கிழமை மாலை 5-45* | *ஸ்ரீமத் ராமாயணம் - Dr. N. வீழிநாதன் (22-1-77)*<br>*வாமனவதாரம் - ஸ்ரீ க. கோதண்டராமன் (29-1-77)* |
| **வாரநாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்:** | *(மாலை 5-30) வழக்கம்போல் நடைபெறும்* |
| **விசேஷ தினங்கள்:** | *சாதனை தினம் - ஞாயிறு (23-1-77)*<br>*ஸ்ரீமத் சுவாமி பிரம்மானந்தர் ஜெயந்தி-வெள்ளி (21-1-77)*<br>*ஸ்ரீமத் சுவாமி திரிகுணாதீதானந்தர் ஜெயந்தி-ஞாயிறு (23-1-77)*<br>*ஸ்ரீ ஸ்ரீ சரஸ்வதி பூஜை - திங்கள் (24-1-77)*<br>*சுவாமி அத்புதானந்தர் ஜெயந்தி - வெள்ளி (4-2-77)* |
| **விசேஷச் சொற்பொழிவுகள்:** | |
| *சனிக்கிழமை மாலை 5-45* | *இராமாயணத்தில் ஆராய்ச்சி: ஸ்ரீ பி. ராமகிருஷ்ணன் (5-2-77)*<br>*ஸ்ரீமத் ராமாயணம்: Dr. N. வீழிநாதன் (12-2-77)* |

*அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்*

*தலைவர்,*

**தொலைபேசி எண்: 71231** **ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600 004**

விலைப் பட்டியல் (1—6—76)

## எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் :**

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டு பாகமும்) | 15 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 5 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபநிஷதம் | 1 | 50 |
| உபகதைகள் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | 2 | 00 |

**சுவாமி விவேகானந்தர்:**

| | | |
|---|---|---|
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 1 | 25 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | 11 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் | 6 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் காலிகோ | 7 | 00 |
| அருளுரை | 1 | 75 |
| கல்வி | 2 | 50 |
| நமது தாய்நாடு | 1 | 00 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| கருமயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் (அச்சில்) | | |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 0 | 25 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 50 |
| எனது குருநாதர் | 1 | 25 |

| | ரூ. | பை |
|---|---|---|
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| எனது போர்முறை | 0 | 75 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |

**ஸ்ரீ சாரதாதேவியார் :**

| | | |
|---|---|---|
| ஸ்ரீ சாரதாதேவியார்—அவரது வரலாறும் திருவாக்கும் | 3 | 25 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |

**இதர நூல்கள் :**

| | | |
|---|---|---|
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| குருதேவர் வாக்கியம் (அச்சில்) | | |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| நாரதர் கலகம் | 2 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீ ராமநாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |

**முரசு நூல்கள் :** (பாக்கட் சைஸ்)

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 | 80 |

### சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்: சுடர்கள் 1—10

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை—அனைத்தும் அடங்கிய 10 பகுதிகள்.
ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

**சாதா பைண்டு விலை ரூ. 5–00** **காலிகோ பைண்டு ரூ. 6–50**



**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

**மயிலாப்பூர் :: சென்னை 600004**

# ஆசிரியர் 'அண்ணா' உரை எழுதிய எங்கள் நூல்கள்

**நாகரத்திலும் தமிழிலும் மூலமும் பதவுரை பொழிப்புரைகளும்**

**விளக்க உரையும் குறிப்புகளும் உள்ளன**

---

### I. உபநிஷதங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஈச-கேன-கட உபநிஷதங்கள் (அச்சில்) | | |
| ப்ரச்ன-முண்டக-மாண்டுக்ய-ஐதரேய உபநிஷதங்கள் (பக்கம் 172) | 1 | 75 |
| காலிகோ | 2 | 50 |
| தைத்திரீய உபநிஷத்து (பக்கம் 91) | 1 | 50 |
| காலிகோ | 2 | 50 |
| சாந்தோக்ய-ப்ருஹதாரண்யக உபநிஷத்துகளின் ஸாரம், ப்ரஹ்மஸூத்ரத்துடன் (மூன்றாவது பதிப்பு) பக்கம் 320 | | |
| காலிகோ | 4 | 50 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரீய நாராயணவல்லி) பக்கம் 146 | 3 | 00 |

### II. பகவத்கீதை

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பகவத்கீதை | 8 | 00 |
| ('அண்ணா' உரையுடன் 6-வது புதிய பதிப்பு) காலிகோ | 9 | 50 |
| ஸ்ரீமத் பகவத்கீதை (பாராயணம்) | 4 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை மூலம் (தமிழ்) பாக்கட் சைஸ் | 2 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) பக்கம் 223 | 2 | 00 |

### III. வேதாந்த ப்ரகரணம்

| | ரூ. | பை |
|---|---|---|
| விவேகசூடாமணி (பக்கம் 392+XII) | 4 | 25 |
| காலிகோ | 5 | 50 |

### IV. வேதநூல்களும் பிரயோகங்களும்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீருத்ரம்-சமகம் (மஹாந்யாஸத்துடன்-பக்கம் 296) | 4 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம் :— | | |
| தமிழில் ஸ்வரத்துடன் | 6 | 00 |
| நாகரத்தில் ஸ்வரத்துடன் முதல்பாகம் | 2 | 50 |
| ஷை இரண்டாம் பாகம் | 3 | 00 |
| ஸ்ரீதேவீமாஹாத்மியம் | 8 | 00 |
| ஸ்ரீதேவீமாஹாத்மியம் பாராயணம் (தமிழில் மூலம்) | 2 | 00 |
| உபநயனம் (அச்சில்) | | |

| | ரூ. | பை |
|---|---|---|
| தேவிஸ்தோத்திரங்கள் | 2 | 50 |
| குருகீதை | 1 | 00 |
| ஜபவிதானம் (பக்கம் 90) | 1 | 00 |
| ஸந்தியாவந்தனம் (பக்கம் 144) | 2 | 00 |
| (தமிழ்) காலிகோ | 4 | 00 |
| ,, ,, (நாகரம்—தமிழ்) | 4 | 00 |
| தேவீஸூக்தங்களும் உபநிஷதங்களும் | 1 | 50 |
| புருஷஸூக்தம் | 2 | 25 |
| பூஜாவிதானம் (தமிழ்) | 5 | 00 |
| ,, காலிகோ | 7 | 00 |
| ,, (நாகரம்) | 4 | 50 |

### V. புராணங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பாகவத ஸாரம்: முதல் பாகம் (ஸ்கந்தம் 1-9) பக்கம் 560 | 10 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் (ஸ்கந்தம் 10-12) பக்கம் 560 | 12 | 50 |

### VI. ஸ்தோத்ரங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸௌந்தர்யலஹரீ பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 7 | 00 |
| ஸௌந்தர்யலஹரீ (மூலம்) ,, நாகரம்-தமிழ் | 1 | 50 |
| சிவானந்தலஹரி (பாஷ்யம்) | 4 | 00 |
| ,, (மூலம்) | 1 | 00 |
| சிவ ஸ்தோத்திரங்கள் | 1 | 50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 6 | 50 |
| ,, ,, பாராயணம் | 3 | 00 |
| ,, ,, மூலம் | 1 | 50 |
| ஸ்ரீலலிதா த்ரிசதீ பாஷ்யம் பக்கம் 184 | 2 | 50 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரம் | 1 | 00 |
| ஸ்ரீவித்யா | 5 | 00 |
| ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 6 | 00 |
| ,, ,, ஸ்தோத்ரம் | 2 | 00 |
| (பாராயணத்திற்குரியது) பக்கம் 96 | | |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| பஜகோவிந்தம் | 1 | 00 |
| ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம் (பக்கம் 271) | 4 | 50 |
| அஷ்டோத்தர சத நாமாவளிகள் பக்கம் 60 | 0 | 75 |
| ஆதித்ய ஹ்ருதயம் | 0 | 75 |

---

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் : : மயிலாப்பூர், சென்னை 600 004**

## விவேகானந்தரின் ஞானதீபம்

10 சுடர்கள் ஒரு சுடரில் 500 பக்கங்களுக்குக் குறைவில்லை

சுவாமி விவேகானந்தர் பேசியவையும் எழுதியவையும்
எல்லாம் இவற்றுள் அடக்கம்

இந்து மதமும், பலவகைச் சமயங்களும் சமய குரவர்களும்; பல சமயப் பேரவையில் சுவாமிகளின் சொற்பொழிவுகள்; கரும யோகம், பக்தி யோகம், இராஜ யோகம், ஞான யோகம்; வேதாந்தத்தின் ஸமரஸம், ஸாங்கியம், யோகசூத்திரம்; சுவாமிகளின் சம்பாஷணைகள், கடிதங்கள்; (வினாக்களுக்கு) விடைகள், உபதேச மொழிகள், பாடல்கள், ஐரோப்பியப் பயணம்; இந்தியர்க்கும் உலகத்தார்க்கும் அளித்த செய்திகள்: இந்தியாவும் அதன் பண்பாடும் பிரச்சினைகளும் பிறவும் விளக்கப்படுவன.

ஞானஜோதியை வீசுவது; தேசபக்தியை ஊட்டுவது; அறிவிற்கு ஒளியினையும் நெஞ்சிற்குச் சாந்தியையும் கைகளுக்குச் சக்தியையும் பொழிவது; நாடும் மக்களும் உய்யும் வழி காட்டுவது. இது ஞானக் களஞ்சியம்; வேறு நூல் கற்றல் வேண்டா.

தக்காரது தமிழாக்கம்: பலரும் பாராட்டுவது: விரைவில் விலையாவது:

செவ்வையான அச்சு ! நல்ல கட்டடம் !

| | | | முழுத் தொகுதி | ஒவ்வொரு பகுதியும் |
|---|---|---|---|---|
| 9 சுடர்கள் | சாதாரண பைண்டு | விலை | ரூ. 45 | ரூ. 5–00 |
| ,, | காலிக்கோ பைண்டு | ,, | ரூ. 58.50 | ரூ. 6–50 |

தபால் செலவு வேறு

இந்த ஞானதீபச் சுடர்கள் இல்லந்தோறும் ஒளி தருமாறு உதவ வேண்டும் என்பதும் ஒவ்வொரு குடும்பமும் நிறுவனமும் இந்தத் தொகுதியை வாங்கிப் பயனுற வேண்டும் என்பதும் எங்கள் பேரவா.

நூல்நிலையங்களும் கற்றோர் குடும்பங்களும் பிரதிகளுக்கு முந்துவனவாகுக.
குறிப்பு:— தற்போது 4-ஆம் சுடர் மட்டும் கைவசம் இல்லை.

மானேஜர்
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர் : : சென்னை 600004

ஆசிரியர்: சுவாமி சித்பவானந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்பவானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசாமி ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 97 லாய்ட்ஸ் ரோடு சென்னை 600086